
எடை அதிகம்!
அழகு மிக அதிகம்!
OKJ
SINCE 1933
ORIGINAL KERALA JEWELLERS
74, USMAN ROAD
அதிக எடையுள்ள நகைகளை வாங்க வரவேற்கிறோம். 150 கிராமுக்கு மேல் தங்கம் வாங்கினால் ஒவ்வொரு கிராமுக்கும் ரூ.25/- மிச்சப்படுத்த முடியும். உங்கள் நண்பர்கள் உறவினர்கள் எல்லோருடனும் சேர்ந்து நகை வாங்குங்கள்; நிறைவாகப் பயனடையுங்கள்!
(ரங்கநாதன் தெரு எதிரில்), தி[redacted]போன்: 2434 0027 / 2434 5809. பார்க்கிங் வசதி உண்டு. ஞாயிறும் விற்பனை உண்டு.




# 1953-55 உதவுங்கள் ப்ளீஸ்!

நான் 1953 - 1955ம் வருடம் திருச்சி அரசினர் ஆண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் (Govt. Teacher's Training School, Trichy) நான்-பேஸிக் (Non-basic) 'செகண்டரி கிரேட்' பயிற்சி பெற்ற மாணவர்களில் ஒருவன். நான் சில ஆண்டுகள் ஆந்திராவில் இருந்து விட்டதால், யாருடனும் தொடர்பு கொள்ள முடியாமல் போய்விட்டது. 2005ல் 50 ஆண்டுகள் பூர்த்தி ஆவதால் என்னுடன் படித்தவர்களுடன் தொடர்பு கொள்ள விரும்புகிறேன். சில பெயர்கள்தான் நினைவில் உள்ளன. திருவாளர்கள் நடராஜன், பாஷ்யம், கன்னையன், தங்கையன், தர்மலிங்கம், ராமலிங்கம் முதலியவர்கள். தொடர்பு கொள்ள : பிளாட்-12, பாரதி தெரு, வெங்கடேசா நகர், புழுதிவாக்கம், சென்னை - 600 091. தொலைபேசி : 044-22420181.

எங்கள் நட்பு தொடர தங்கள் கல்கி பத்திரிகை பாலமாக இருந்து உதவ வேண்டுகிறேன்.

- சீனிவாசன்

இதுபோல உங்களுக்கும் ஏதாவது தேவைகள் இருப்பின், 'கல்கி'யின் 'பாலம்' பகுதிக்கு எழுதி அனுப்புங்கள். முக்கிய நிபந்தனை : அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்ப வேண்டும்.

## சர்ச்சை சர்வே - 3

டியர் வாசகாஸ்...

16ம் பக்கம் வெளியாகியுள்ள ராமதாஸ் பேட்டியைப் படியுங்க! 'இன்றையச் சூழ்நிலையில் மொழிப் போர் அவசியமா?' உங்கள் கருத்து என்ன? ஆம் / இல்லை என்று எழுதி, நான்கே வரிகளில் காரணத்தை விளக்கி அனுப்பி வைக்கவும்.

'சர்ச்சை சர்வே - 3' என்று குறிப்பிட மறக்க வேண்டாம்.

கடைசித் தேதி : 9.4.05

✉ தேர்வு நேரத்தில் மாணவர்களுக்கும், பெற்றோர்களுக்கும் தக்க சமயத்தில் உதவும் வகையில் நிறையக் கட்டுரைகள் இருந்தன. பரீட்சை டயட், கைமேல் வேலை போன்ற கட்டுரைகள் அருமை. 'கல்கி' கையில் இருந்தாலே கௌரவம் தான்.
ஆரணி, சீனிவாசன்

✉ 'படிச்சது ஒன்னு... கிடைச்சது பொண்ணு...' சூப்பர் புள்ளி விவரம் சார்! அதுசரி... 'ஜோ'... புகைப்படம்... ஏன் மிஸ்ஸிங்...?
சென்னை - 33, மயிலை கோபி

*இப்ப வைச்சாச்சு!*

*(ஆர்.)*

✉ லேனா தமிழ்வாணனின் பாராட்டை மெய்ப்பிப்பது போல் அமைந்துள்ளது இந்த வார 'கல்கி' படிப்பு ஸ்பெஷல். பக்கத்துக்குப் பக்கம், சமுதாய நோக்கம். வேலை வாய்ப்பு பற்றி எத்தனை, எத்தனை தகவல்கள். டயட் முதல் டென்ஷன் வரை அறிவுரைகள். அடடா! இப்படியெல்லாம் நமக்கு எடுத்துச் சொல்ல அரை நூற்றாண்டுக்கு முன்பு ஆள் இல்லையே என்ற பொறாமையும் இலேசாக எட்டிப் பார்க்கிறது.
மடிப்பாக்கம், எம்.பி. துரைஸ்வாமி

## ஒரு மாதிரி... புது மாதிரி!

✉ மிகவும் பயனுள்ளதாக அமைந்துவிட்ட 'கல்கி'யின் படிப்பு ஸ்பெஷலுக்கு, நூற்றுக்கு நூறு மதிப்பெண்களை தாராளமாக வழங்கலாம்!
வேலூர் - 6, வே.ந. கதிர்வேல்



அடுத்த இதழ்...

**கல்கி**

## திகில் ஸ்பெஷல்!



✉ கார்ட்டூன்கள் மூன்றுமே படுசூப்பர். 'சட்டமன்ற ஜனநாயகம்' என்ற மரத்தின் கிளைகள் வெட்டப்படுவதைப் போன்ற கார்ட்டூன், மார்ச் மாதத்தின் 'மார்ச் பாஸ்ட்' கார்ட்டூன்!

லோயர் அணைக்கட்டு, பி.இராஜேந்திரன்

✉ 'கல்கி' வாங்கியதும் நான் முதலில் படிப்பது பாரபட்சமற்ற தலையங்கம்தான்! நல்லது நடந்தால் பாராட்டி, பொல்லாதது நடந்தால் சுட்டிக் காட்டும் உங்கள் பணி தொடரட்டும்.

சென்னை - 17, ஆர்.ரங்கநாதன்

✉ 'விநாயகர் விஷ்ணுவின் மகனா?' கேள்வியும் அதற்கான விளக்கமும் வியக்க வைத்தது!

பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ என். ரங்கநாயகி எழுதிய 'தவிப்புகள்' நிஜமாகவே தவிக்க விட்டது!

நெய்வேலி - 7, எஸ்.கண்ணன்

✉ "கல்கி'க்கு என சில தனிச் சிறப்புகள் உண்டு. அவற்றில் முதன்மையானது நடுநிலைமை. திரைப்பட விமர்சனம் கூட தெள்ளத் தெளிவாக, குற்றம் காட்டியும் குணம் காட்டியும் எழுதப்படுகிறது. 'ராம்' சினிமா விமர்சனம், ஒரு நூலைத் திறனாய்வு செய்தது போல திறம்பட எழுதப்பட்டிருந்தது.

வேலூர், காமாட்சி சத்தியநாராயணன்

✉ நான் 1953ம் ஆண்டு முதல் கல்கி வாசகனாக இருக்கிறேன். எனது பதினேழாவது வயதில் 'கல்கி' வந்ததும் 'பொன்னியின் செல்வன்' தொடரை உடனடியாகப் படித்துவிடுவேன். சுஜாதா எழுதும் 'உள்ளம் துறந்தவன்' இளமைத் தொடர், அதே போன்ற ஆர்வத்துடன் படிக்கத் தூண்டுகிறது. என்றும் இளமையாக இருக்கும் 'கல்கி'க்கும், விறுவிறுப்புடன் எழுதும் எழுத்தாளர் சுஜாதாவுக்கும் வாழ்த்து!

சென்னை - 73, எல். மாதவன்

✉ இந்தியாவின் மாதிரி மாநிலம் பற்றிய கேள்விக்கு, ஒரு மாதிரியான பதிலை புது மாதிரியாகத் தந்து அசத்திட்டீங்க தராசு!

அயன்புரம், த.சத்தியநாராயணன்


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22251522, 22250623,
22251324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

● ஜி. மாரியப்பன், சின்னமனூர்.

? தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் மிக அவசியமானதா...?

! தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் என்பது அபத்தம். தேவை: தமிழ் வளர்ச்சி இயக்கம். முன்னது அரசியல், பின்னது தமிழ் ஆர்வம்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? கொல்கத்தா டெஸ்ட் மேட்சில் இந்திய அணி வெற்றி பெற்றது குறித்து...?

! சச்சினின் டெஸ்ட் 10,000; யூனுஸ் - யுஹானா ஜோடியின் கலக்கலான செஞ்சுரிகள், பிரஸன்னாவை விஞ்சிய ஹர்பஜனின் 190வது விக்கெட்; இரண்டு இன்னிங்ஸிலும் சதம் அடித்த டிராவிட்; இரண்டாவது இன்னிங்ஸில் கும்ப்ளேயின் 63 ரன்களுக்கு ஏழு விக்கெட் சாதனை... என நினைத்து நினைத்து மகிழ பல உண்டு என்றாலும், ஹர்பஜனின் தூஸ்ரா குறித்த சர்ச்சை மீண்டும் தலைதூக்கி, வெற்றிக் களிப்பைக் குறைத்து விட்டதே!

* அர்ப்பணிப்புச் சர்ச்சை!



* அச்சமூட்டும் அன்பு!





* பழைய யாத்திரிகர்!

# அரசியலில் இன்று அதிசய ராகம் யார்..?

● வே. பாலா, திண்டுக்கல்.

? 'சோனியாவை பெரிய தலைவராகக் காட்டுவதற்காகவே தண்டி யாத்திரையை ஐக்கிய முற்போக்குக் கூட்டணி நடத்துகிறது' என்று அத்வானி கூறியுள்ளாரே...?

! ரத யாத்திரை, அத்வானியைப் பெரிய தலைவராகக் காட்டுவதற்கு;

தண்டி யாத்திரை மகாத்மா காந்தியைப் பெரும் தலைவராக நினைவு கூர்வதற்கு.

● காஞ்சனா ராதாகிருஷ்ணன், சென்னை - 28.

? ஏனுங்க... வளர்ப்பு மகன் திருமணத்துக்குத் தெருவிளக்குகளிலேருந்து மின்சாரத்தை எடுத்ததைக் காட்டிலும் மரக் கிளைகளை வெட்டறது பெரிய தப்புங்களா...?

! எது சின்ன தவறு, எது பெரிய தப்பு என்பது தவறு செய்யற நபர்களைப் பொருத்த விஷயமும்கூட. அறிவாளிகளாகக் கருதப்படுவோர், பொறுப்பான பதவிகளில் இருப்போர், சிறிய தப்புகூட செய்யக் கூடாது. செய்த பிறகு அதிலிருந்து தப்பிக்க முயல்வது அதைவிடப் பெரிய தப்பு!

● மகா, திருப்பூர் - 3.

? பெரிய திரை நட்சத்திரங்கள் சின்னத் திரையில் ஜொலிப்பது போல், சின்னத் திரை நட்சத்திரங்கள் பெரிய திரையில் சோபிக்க முடிவதில்லையே...?

! மாதவன், ஷாருக்கானை வைத்துக் கொண்டு இப்படிக் கேட்கலாமா மகா...?

● ரேவதிப்ரியன், ஈரோடு - 2★

? தெஹல்கா; அதைத் தொடர்ந்து தொலைக்காட்சிகள்... இப்படி நடிக நடிகைகளின் அந்

நீங்கள்

தரங்க வாழ்க்கையை வெளிப்படுத்துவது, இன்வஸ்டிகேடிவ் ஜர்னலிஸம்தானா...?

! தெஹல்கா லஞ்ச - ஊழலை அம்பலப் படுத்தவில்லை. ராணுவம் - பாதுகாப்பு தொடர்புள்ளவர்களிடம் ஆசை காட்டி, அவர்கள் வலையில் விழுந்ததைப் படம் பிடித்துக் காட்டியது. அதாவது ஒரு நாடகம் நடத்தி, சம்பந்தப்பட்டவர்களை பலி வாங்கியது. எனவே, தெஹல்கா 'அம்பலம்' நியாயமானதா என்பது குறித்தே இன்னமும் கருத்து மாறுபாடு உண்டு. அப்படியிருக்க, தனி நபர்களின் அந்தரங்க வாழ்க்கையை வெளிப்படுத்துவது என்பது அநாகரிகத்தின் உச்சம். 'Right to privacy' என்ற உரிமையை மீறுவதாகும்.

● பொன்விழி, அன்னூர்.

*? வைகோ, கலைஞர் மீது வைத்துள்ள அன்பை வெளிப்படுத்தியதைக் கூட சன் டீ.வி ஒளிபரப்பவில்லையே... ஏன்?*

! கலைஞர் மீது வைகோ வைத்த அன்பில் நெகிழ்ந்து, எங்கே வைகோ மீது மக்கள் அன்பாகி விடுவார்களோ என்று சன் டீ.வி



• மீடியா திசை திருப்பல்!

# கேட்டவை - தராசு

பயந்திருக்கலாம்!

● எஸ்.அன்புமணி, ஈரோடு.

*? "சில கட்சிகளின் தலைவர்கள், இறக்கும் வரை தலைவர் பதவியில் இருக்கிறார்கள். அங்கே உட்கட்சி ஜனநாயகம் இல்லை" என்று தலைமை தேர்தல் கமிஷனர் கூறியுள்ளாரே...?*

! உட்கட்சி ஜனநாயகம் மூலமே சாகும்வரை தலைவராக இருப்போரும் உண்டு. இரண்டையும் முடிச்சுப் போடக் கூடாது. உட்கட்சி ஜனநாயகம் தேர்தல் சீர்திருத்தங்களில் ஒன்றாகி, அவை சட்ட வடிவம் பெறுதல் அவசியம். எப்போ நடக்குமோ? எந்த அரசியல்வாதி எலி, பூனைக்கு மணி கட்டும்?

● அ. கோவிந்தன், சேலம்.

*? சத்துணவு ஊழியர்களுக்குத் திடீர் சம்பள உயர்வு, பிற சலுகைகள் வழங்கியிருப்பது எதைக் காட்டுகிறது?*



• இன்றைக்குப்...



• ....பெரிசுங்க!

! தமிழக முதல்வருக்குத் தேர்தல் 'மூட்' வந்திருப்பதை... தமிழக அரசு தேர்தல் 'மோடு' (mode)க்கு மாறியிருப்பதை!

● பி. ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி.

*? அரசியலில் இன்று அதிசய ராகம் யார்? ஆனந்த ராகம் யார்? அழகிய ராகம் யார்? அபூர்வ ராகம் யாருங்க சார்...?*

! நாடாளுமன்றத்தில் கன்னிப்

பேசு நிகழ்த்தி, கட்சிகளைக் கடந்த கரகோஷம் பெற்ற ராகுலே அதிசய, ஆனந்த, அழகிய ராகம்... இது அபூர்வ ராகமாகிவிடாமல் அவரே காத்துத் தரட்டும்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? நடிகை சொர்ணமால்யா நடித்திருக்கும் படத்தைப் பார்த்த சென்ஸார் போர்டு அதிகாரிகள் அதிர்ந்து



அ-ஆ-அ ராகம்!



மீண்டும் தூஸ்ரா!

போனார்களாமே...?

! சொர்ணமால்யா வேறு ஒரு செய்தி மூலம் 'பிரபல' மாகிவிட்டதால், படாதிபதி, இயக்குனர் ஆகியோரை ஒதுக்கி விட்டு, சொர்ணமால்யாவை மையப் படுத்தி செய்தி பிரசுரிக்கப்படுவது அதிர்ச்சி. சென்ஸார் எதனால் அதிர்ச்சி அடைந்தார்கள் என்பதை நுணுக்கமாக விவரித்து, பக்கம் பக்கமாகப் பத்திரிகைகள் எழுதுவது, பேரதிர்ச்சி. இவற்றுக்கிடையில் சென்ஸார் அடைந்த அதிர்வு, அதிர்ச்சி அளிக்கலைங்க...

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'அரசு மருத்துவமனைகளில் போடப்படும் 69 சதவிகித ஊசிகள் பாதுகாப்பற்றவை' என்று மத்திய நல்வாழ்வுத்துறை இணை அமைச்சர் பனபகாலட்சுமி கூறியிருப்பது குறித்து...?

! இதற்கு மத்தியில், சென்னை பொது மருத்துவமனை ஐஎஸ்ஓ தரச் சான்றிதழ் பெற்றிருப்பதை ஆச்சர்யம் என்று மகிழ்வதா? அபாயம் என்று அஞ்சுவதா? சுத்தமாகப் புரியவில்லை!

● பால. சூர்யா, சென்னை - 91 ❒

? 'பொதிகை' செய்தியில், "தாம்பரம் - திண்டிவனம் நான்கு வழிப் பாதையை கருணாநிதி நாட்டுக்கு அர்ப்பணித்தார்" என்று கூறினர். இப்படிச் சொன்னால், சொந்தப் பணத்தில் திட்டத்தை அமைத்தது போலல்லவா தோன்றுகிறது? இது சரியா?

! நாட்டுக்கு அர்ப்பணித்தல் என்ற சொற்றொடர் 'dedicated to the nation' என்பதன் தமிழாக்கம். இதில் இரண்டு ஆட்சேபணைகள் உண்டு. (1) சாலையைப் பயன்படுத்த கட்டணம் வசூலிக்கப் போகிறார்கள். எனவே அர்ப்பணிப்பு ஆகாது. (2) இன்று தேசிய அளவிலான திட்டங்களுக்கு தி.மு.க சாயம் பூசப்படுகிறது. எனவே உதயசூரியனுக்கு அர்ப்பணிப்பு என்று கருதப்பட வாய்ப்பு உள்ளது!

● கு. கணேசன், பணங்கோட்டூர்.

? "காமராஜர் ஆட்சியை நாங்கள் பார்த்ததில்லை. பார்க்கிற ஆட்சியைக் கொண்டு வருவோம்னு பேசுவது நகைப்புக்குரியது. எனவேதான் எதிர்காலத்தில் ராகுல் காந்தி ராஜ்யம் உருவாக்கும் முயற்சியில் குதிக்கிறோம்" என்று இளைஞர் காங்கிரஸ் தலைவர் விஷ்ணு பிரசாத் கூறியிருப்பது பற்றி...?

! பார்க்காத ஒன்றைப் பற்றிப் பேசி உத்தரவாதம் அளிக்கத் தயக்கம் என்றால், இன்னும் நடைபெறாத ஒன்றை உத்தரவாதம் செய்ய எத்தனை தயக்கம் காட்ட வேண்டும்...! நோக்கம், ராஜ்ஜியம் அமைப்பது அல்ல; ராகுல் துதி தான் என்கிறபோது, எதுவும் சல்தா ஹை ஜீ!

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
பால சூர்யா,
5/501, சத்சங்கம் தெரு,
மடிப்பாக்கம் 600 091.

● ரூ 50 பரிசு பெறுபவர்:
ரேவதிப்ரியன்,
299, வளையல்கார வீதி,
ஈரோடு - 1.

# முந்துகிறது மும்பை

'இந்திய ரயில்வே போல இல்லாமல், மும்பை எக்ஸ்பிரஸ் சரியான நேரத்துக்கு வந்து சேரும். வதந்திகள் குறித்து ரசிகர்கள் குழப்பமடைய வேண்டாம்' என அதிரடியாகவும், அவசரமாகவும் அறிவித்திருக்கிறார் கமல். என்ன காரணம்?

'மும்பை எக்ஸ்பிரஸ் போலவே தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று வெளிவரும் சந்திரமுகி படத்துக்கு சாதகமாக மும்பை எக்ஸ்பிரஸ் படத்தின் வெளியீட்டை கொஞ்சம் தள்ளி வைக்க முடியுமா?' என்று கமலிடம், ரஜினி வேண்டுகோள் விடுத்ததாகவும், அதை கமல் உறுதியாக மறுத்துவிட்டதாகவும் பரபரப்பாக பரவிய செய்திகளைத் தொடர்ந்தே இப்படியொரு அறிவிப்பு.

அதே தினத்தன்று வெளிவர இருந்த விஜய்யின் 'சச்சின்' படம், வேண்டுகோள் எதுவும் இல்லாமலேயே பதுங்கிப் பின்வாங்கிவிட்டது தனிக்கதை. போனஸாக, விக்ரம் நடிக்க ஷங்கர் இயக்கி வரும் 'அந்நியன்' படமும், தமிழ்ப் புத்தாண்டு கோஷத்தைக் கைவிட்டு கமுக்கமாக இருக்கிறது. ஊர்வம்பு நமக்கெதற்கு? மும்பை எக்ஸ்பிரஸ் Vs சந்திரமுகி என்று தமிழ்ப் புத்தாண்டு முதல் தமிழகத் திரையரங்குகளில் தணல் வீசப் போகிறது.







இனி மும்பை எக்ஸ்பிரஸில் ஏறி ஒரு வெள்ளோட்டம் வரலாம், வாங்க.

• மும்பை எக்ஸ்பிரஸ் ஓர் ஆள்மாறாட்டக் கதை. அதே நேரம் கடத்திச் செல்லப்படும் மகனை கமல் மீட்டுவருவதுதான் பாதிப்படம் முழுக்க. கமல் சர்க்கஸ் கலைஞராக நடிக்கிறார். மோட்டார் சைக்கிளில் பல்வேறு சாகஸங்களைச் செய்யும் வீரர். அதில் ஒன்று மரணக் கிணற்றில் பைக் ஓட்டுவது. இதற்காக கமல் பயிற்சி எடுத்தபோது, அவரது கால் எலும்பு முறிந்து விட்டது.

• இப்போது கையையும் முறித்துக் கொண்டிருக்கிறார் கமல். கதைப்படி, கமல் ஒரு சர்வதேச மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் பங்கு பெறுகிறார். இதை ஏ.எக்ஸ்.என். ஸ்போர்ட்ஸ் தொலைக்காட்சியில் லைவ் ஷோவாக ஒளிபரப்புவதுபோல் படத்தில் காட்சி வருகிறது. இந்த பைக் ரேஸ் காட்சிகளை மட்டும் பதினைந்து நாட்கள் படம் பிடித்திருக்கிறார்கள். இதற்காக ஹாங்காங்கில் இருந்து அழைத்து வரப்பட்ட பைக் ரேஸர்களிடம் சிறப்புப் பயிற்சி எடுத்துக் கொண்டு டூப் போடாமல், அவர்களுடன் ரேஸில் பைக் ஓட்டியிருக்கிறார் கமல். அப்போது ஏற்பட்டதுதான் கையில் எலும்பு

முறிவு.

• சார்லி என்ற குதிரையை ஒரு கேரக்டரில் நடிக்க வைத்திருக்கிறார் கமல். சார்லி சாப்ளின் போல வாத்து நடை நடப்பதால், இந்தக் குதிரைக்கு இப்படியொரு பெயராம்.



# க்ஸ்பிரஸ்!

• ஜாஸ் இசை கலந்த சூப்பர் பாடல் ஒன்றை கமலும், சோனு நிகாமும் பாடியிருக்கிறார்களாம். இந்தப் பாடலின் சூழ்நிலையை மும்பையிலிருந்து கமல், கவிஞர் வாலியிடம் சொல்ல, அரைமணி நேரத்தில் பாடலை எழுதி போனிலேயே சொல்லியிருக்கிறார்.

• திருவாசகத்தை சிம்பொனியில் வடித்த இளையராஜா, அதற்குப் பயன்படுத்திய ஹங்கேரி சிம்பொனி இசைக் கலைஞர்களை வைத்து, புடாபெஸ்டில் பின்னணி இசையை ஒலிப்பதிவு செய்திருக்கிறார்.

• படத்தின் எடிட்டர் அஸ்மித் குண்டர். 'கல்ஹோ நாகோ' ஹிந்திப் படத்தில் எடிட்டரான சிரிஷ் குண்டரின் சகோதரர் இந்த அஸ்மித் குண்டர்.

• மும்பை எக்ஸ்பிரஸுக்காக மைலோ என்ற மோசன் கண்ட்ரோல் கேமராவையும், எச்.டி. கேமராவையும் ஹாலிவுட்டுக்கு இணையாக இந்தியாவில் முதன் முறையாக கமல் பயன்படுத்தியிருக்கிறார். படம் ஒளி ஒலி முறையில் டிஜிட்டலாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

• "காமெடி மூலம் சமூகத்துக்கு மெசேஜ் சொல்ல வரும் மும்பை எக்ஸ்பிரஸ், ஒரு அதிநவீன தொழில் நுட்ப சினிமா" என்கிறார் கமல்.

தொகுப்பு : **ரவுண்ட்ஸ்பாய்**

படங்கள் உதவி : **நிகில்**

## மரணக் கிணற்றுக்கு தடை!

**க**மல், அவினாசி என்கிற மோட்டார் சாகஸ வீரராக, கிளாமராக ஒரு கதையைத் தந்திருக்கும் இந்த வேளையில், தமிழ்நாட்டில் மரணக் கிணறு சாகஸ நிழ்ச்சிக்கு, அரசு தடை விதித்துவிட்டதாகத் தகவல். கோயில் உற்சவம், கொடை விழா, பொருட்காட்சி என்று ஊர்த் திருவிழாக்களில் இனி மரணக் கிணற்றைப் பார்க்க முடியுமா என்பது சந்தேகம்தான். மரணக் கிணற்றில் பைக் ஓட்டி, கழுத்தெலும்பு ஒடிந்து இறந்து போனவர்களின் எண்ணிக்கை அதிகம் என்பதால், தடை செய்யப்பட்டுள்ளது. இந்தக் கலைஞர்கள் இப்போது பீகார், ராஜஸ்தான் என்று பிழைப்பு தேடிப் போய்விட்டார்களாம்.

# அஞ்சல் வழியில் ஹிந்தி கல்வி!

பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கம், (SBIOA) கல்வித் துறைக்கு ஆற்றி வரும் பணிகள் அனைவரும் அறிந்ததே.

இச்சங்கம் SBIOA Institute (பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்க பயிற்சி மையம்) என்ற பயிற்சி மையத்தின் மூலமாக பல ஹிந்தி பாடங்களை நடத்தி வருகிறது. இம்மையம் தபால் மூலம் நடத்தும் 'பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமோ படிப்பு' அனைவரின் பாராட்டுதல்களையும் பெற்றது. ஆறு - ஆறு மாதங்கள் (January - June; July - December) நடக்கும் Diploma in Conversational Hindi என்ற பாடதிட்டத்தில் சேர்ந்து பயின்ற அனைவருமே, இதன் மூலம் பெற்ற மொழிப் பயிற்சி, வட இந்தியா சென்ற போது அவர்களுக்கு உறுதுணையாக இருந்ததெனக் கூறுகின்றனர்.

நிற்க - இம் மையத்தில் நடத்தப்படும் பயிற்சிகளின் மூலம் பயன் அடைந்த பலர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, ஹிந்தி மொழி அறிந்தவர்களுக்கென இப் பயிற்சி மையம் பல post graduate diploma பயிற்சி களையும் அஞ்சல் வழியில் நடத்தி வருகின் றது.

ஒவ்வொரு வருடத்திற்கான இப்பயிற்சி களில் சேர்ந்து தேர்வு அடைந்தவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் "Post Graduate Diploma In Translation / Post Graduate Diploma in Journalism / Post Graduate Diploma in Personnel Administration and Human Resource Management" சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர். பாரத ரத்னா சி. சுப்ரமணியம். டாக்டர் கிரண்பேடி - ஐ.பி.எஸ். பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு R.C.ஷர்மா, அருட்செல்வர் Dr. N. மஹாலிங்கம், திரு எஸ். குருமூர்த்தி, Chartered Accuntant and Eminent Columinist, பத்மபூஷன் Dr. V.C. குழந்தைசாமி போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள் ளனர்.

27.09.2004 நடந்த பட்டமளிப்பு விழாவில் முக்கிய விருந்தினராக கலந்து கொண்ட பத்மபூஷன் Dr.V.C.குழந்தைசாமி அவர்கள் கூறியவற்றிலிருந்து சிலவற்றை இங்கு தமிழில் மொழிபெயர்த்து இங்கு அளிக்கின் றோம். உரையாடும் போது கூறிய முக்கிய கருத்துக்கள்:-

*"இன்று நம் நாட்டில் 300 பல்கலைக் கழகங்களும், 15,500 கல்லூரிகளும் உள் ளன. இருப்பினும், இவற்றின் மூலம் படிக்கும் வயதிலிருக்கும் 7% மக்கள் மட்டுமே உயர் கல்வி பெற்று வருகின்றனர். வளர்ந்த நாடு களில் படிக்கும் வயதிலிருக்கும் 50% மேற் பட்ட மக்கள் உயர்கல்வி பெறுகின்றனர். கி.பி.2020க்குள் நம்நாட்டை வளர்ச்சி அடைந்த நாடாக்க விரும்பினால் உயர்கல்வி பெறுவதற்கான வாய்ப்புகளை அதிகரிக்க வேண்டும்.*

*இதற்காக உருவாக்கப்படும் திட்டம்: 1. அதிக உற்பத்தி கொண்டதாகவும் 2. எளிய வளைந்து கொடுக்கும் தன்மை உடையதாகவும் இருக்க வேண்டும். அஞ்சல் வழிக் கல்வியில் இவ்விரு குணங்களும் உள்ளன. அஞ்சல் வழிக் கல்வி, படிப்பவரிடம் அறிவை எடுத்துச் செல்கிறது. படிப்பவர் 1000கி.மீ அப்பால் இருந்தாலும் சரி, 1000மீ அப்பால் இருந்தாலும் சரி, அவர் களிடம் கல்வியை கொண்டு சேர்க்கின்றது. இவ்விதத்தில் நான் SBIOA பயிற்சி மையத்தை பாராட்டுகின்றேன். பலரும் பயன்பெறும் அஞ்சல்வழிப் பயிற்சியை இம்மையம் நடத்தி வருகின்றது."*

**இப்பயிற்சிகளுக்கான விபரம்:**

**1. P.G. டிப்ளமா பயிற்சிகளின் பெயர்கள்:**

1. Post Graduate Diploma in Translation (Hindi - English)

2. Post Graduate Diploma in Journalism (Hindi Medium)

3. Post Graduate Diploma in Personnel Administration and Human Resource Management (Hindi Medium)

**2. பயிற்று மொழி:**

பாடங்கள் ஹிந்தி மொழியில் தயாரிக்கப்பட்டு அனுப்பப்படும். இருப்பினும் (மாணவர்கள் தங்கள் Response Sheetsகளை ஆங்கிலத்திலும் அனுப்பலாம். இறுதித் தேர்வை ஆங்கிலத்தில் எழுதவும் அனுமதி அளிக்கப்படுகிறது.

**3. பயிற்சி காலம்:**

ஓராண்டு (ஜூன் 2005 முதல் மே 2006 வரை)

**4. பயிற்சியில் சேர தகுதி:** ஏதாவதொரு பல்கலைகழகத்தில் பட்டப்படிப்பு (Graduation degree) படித்து பட்டம் பெற்றிருக்க வேண்டும்.



* எட்டாவது பட்டமளிப்பு விழாவின் போது தங்கப்பதக்கம் பெற்ற மாணவர்களுடன் SBIOA Institute, நிர்வாகத்தினர்.

**5. பயிற்சி முறை:** மாதம் ஒரு முறை பாடங்கள் அனுப்பப்படும். பாடத்துடன் பயிற்சிகளும் (Response Sheets) அனுப்பப்படும். இப்பயிற்சிகளை பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும்.

**6. பயிற்சி கட்டணம் :** ரூ.1,750/-

**7. தேர்வுக் கட்டணம் :** ரூ. 500/-

**8. தேர்வு மையங்கள் :**

**a. அகில இந்திய தேர்வு மையங்கள்:**

அகமதாபாத், பெங்களூர், போபால், புவனேஸ்வர், கல்கத்தா, கொச்சின், சென்னை, சண்டிகார், கொஹாத்தி, ஹைதராபாத், லக்னோ, மும்பை, புதுடில்லி, பாட்னா, போர்ட்ப்ளேர்.

**b. தமிழ்நாட்டில் தேர்வு மையங்கள்:** திருச்சி, மதுரை, கோவை, தஞ்சை, சேலம் மற்றும் மாணவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப பரீட்சை நடத்தப்படும்.

இப்பயிற்சி மையம் கீழ்கண்ட பயிற்சிகளையும் அஞ்சல் வழியில் நடத்தி வருகிறது.

1. பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமா - (Tamil Medium)
2. பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமா - (English Medium)
3. பேச்சு மொழி ஆங்கில டிப்ளமா - (Hindi Medium)
4. பேச்சு மொழி தமிழ் டிப்ளமா - (Hindi Medium)

இந்த டிப்ளமா பயிற்சிகளுக்கான கட்டணம் (தேர்வு கட்டணம் உட்பட) ரூ.600 மட்டுமே.

மேற்கண்ட பயிற்சியில் சேர விரும்புபவர்கள் உரிய விண்ணப்பப் படிவத்தையும் மற்றும் பாடத்திட்ட விபரத்தையும் பெற ரூ.100க்கான உள்ளூர் காசோலையோ அல்லது (Demand Draft) வரைவோலையோ எடுத்து, சுயவிலாசமிட்ட, தபால்தலையுடன் (Rs.12)கூடிய உறையுடன் கீழ்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

SBIOA Institute,
229, N.S.C.Bose Road,
Mercantile Plaza, II Floor,
P.B.No.1279,
Chennai - 600 001.
Phone:044 - 25340226

**கவனிக்க:**

1. ஒவ்வொரு பாடத்திற்கும் தனித் தனியாக ரூ.100 செலுத்தி விண்ணப்பிக்க வேண்டும்.

2. விண்ணப்பப் படிவத்திற்கென வரைவோலை அனுப்பும்போது சுயவிலாசமிட்ட தபால்தலையுடன் (Rs.12) கூடிய உறையை சேர்த்து அனுப்பவும்.

3. உறையின் மேல் எந்த பயிற்சியில் சேர விருப்பமோ அதை தெளிவாக எழுத வேண்டும்.

4. பேச்சு மொழி டிப்ளமா பயிற்சியில் சேர்பவர்களுக்கு விண்ணப்பப் படிவக் கட்டணமான ரூ.100 பயிற்சி கட்டணத்திலிருந்துக் கழித்துக் கொள்ளப்படும்.



# மதுமிதாவுக்குப் பிடிக்காத வார்த்தை!

"நீங்கள் பார்த்திபன் அறிமுகமாச்சே! உங்கக்கிட்டே குண்டக்க மண்டக்க கேள்விகள்தான் கேட்போம்" என்றோம் மதுமிதாவிடம். 'ஓ யெஸ். நான் ரெடி'. அவரும் ஒரு ஜாலி யுத்தத்துக்குத் தயாரானார்.

***உண்மையிலேயே உங்க 'குடைக்குள் மழை' பெய்தால்?***

ஓ...நோ! அப்படியே குடையை தூ...ர எறிஞ்சிடுவேன். 'குடைக்குள் மழை' பெய்தால் அதுபேர் குடையா?

***நக்கல் பார்ட்டியான பார்த்திபன் உங்களைக் கிண்டலடித்த சம்பவம் ஏதேனும்?***

ஒரு தடவை பார்த்திபன் நண்பர்கள் ஷூட்டிங் பார்க்க வந்தனர். அவர்கள் வந்த

நக்கலாக, "ஆமாமா, எங்க படத்துல, தினமும் கோழி, பாம்பு, வெளவால், மதுமிதா எல்லாம் யூஸ் பண்றோம்'னு சொல்ல, எனக்கும் 'பக்'னு சிரிப்பு வந்திருச்சு. வேற வழி?

***லல்லுவின் லொள்ளு பிடிக்குமா?***

கேட்டுக்குங்க. தமிழ், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி, ஒரியானு எந்த இந்திய மொழியிலும் எனக்குப் பிடிக்காத வார்த்தை 'அரசியல்'. அடுத்த கேள்வியைக் கேட்கறீங்களா?

***இது பொது அறிவு நேரம். ஓகே? தக்காளி... பழமா? காய்கறியா?***

ம்... சமைக்கிறதால தக்காளி காய்தான். தளதளன்னு சாப்பிட ருசியாவும் இருக்கிறதால அது பழம்தான். போதுமா? உஸ்...ஸ்...!

***'வெல், ஆக்சுவலி' வார்த்தைகள் கலக்காம ஒரு நடிகையால தமிழ் பேச முடியுமா?***

இது என்ன சோதனை? இங்கிலீஷ் கலக்காம என்னால என் தாய்மொழியான தெலுங்கே பேச வராது. இதுல தமிழ் வேறயா?

***இந்த உலகத்துல அல்ஜீப்ரா, டாக்டர் கையெழுத்து இதைத் தவிர புரியாதது வேறெதுவும் இருக்கா?***

இருக்கு. பூமி தன்னைத் தானே சுத்தும்போது எப்படி அதுல உட்கார்ந்திருக்கிற நாம மட்டும் ஆடாம அசையாம இருக்கோம்ங்கிறது எனக்கு ரொம்ப நாளாவே டவுட்டாவே இருக்குங்க. ப்ரெஞ்ச் பியர்ட் வைச்ச




ஆனால், அதைச் சுட்டிக் காட்டி மோடியின் அக்கிரமங்களை நியாயப்படுத்துவது அபத்தம். ஒரு தவற்றை மற்றொன்றால் நியாயப்படுத்த முடியாது.

நரேந்திர மோடிக்கு குஜராத் கலவரங்களைத் தூண்டியதில் நேரடிப் பொறுப்பு இருக்கிறது என, அக் கலவரங்களை ஆராய்ந்த விசாரணைக் கமிஷன், அறிக்கை அளித்துள்ளது. போதும் போதாததற்கு, தேசிய மனித உரிமை கமிஷன் வேறு மோடியைக் கண்டனம் செய்து அறிக்கை அளித்துள்ளது. மேலும் பலவிதமாகக் கடுமையாகக் குட்டப்பட்டும், பதவி நாற்காலியை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறார் மோடி. அவரை நீக்க வேண்டும் என்ற கூச்சலும் குழப்பமும் குஜராத்தில், அவரது கட்சிக்குள்ளேயே எழுந்து - வலுத்தும் வருகிறது!

இத்தகைய நபரின் பேரில் அவரது கட்சித் தலைமை அனுதாபம் காட்டுவதே ஏற்கக் கூடியது அல்ல. இவ்வாறிருக்க, அவர் மக்கள் பிரதிநிதி என்ற காரணத்துக்காக, அவருக்காக மத்திய அரசு வேறு வாதாட நேர்ந்திருக்கிறது!

மக்கள் பிரதிநிதி முதல்வராகி, குஜராத் மக்களுக்கு என்ன பாதுகாப்பு அளித்தார் ? கலவரங்களைத் தாம் தூண்டவில்லை என்று மோடி சத்தியம் செய்வார். அப்படியானால் கலவரங்களைத் தவிர்த்திருக்க வேண்டியவர், குஜராத் பற்றி எரிவதை அனுமதித்தது ஏன்...? முதல்வர் என்பதால் இவற்றுக்கான தார்மிகப் பொறுப்பை அவர் ஏற்றுத்தானே ஆக வேண்டும் ? மனித உரிமை மீறலுக்காக இல்லாவிட்டாலும், கலவரத்தைத் தடுக்கத் தவறியதற்காக, தார்மிகப் பொறுப்பேற்று அவர் ராஜினாமா செய்திருப்பாரேயானால், அவருக்கும் மூக்குடைப்பு மிஞ்சியிருக்கும்; இந்திய இறையாண்மைக்கு அமெரிக்காவால் பங்கம் ஏற்படுவதும் தவிர்க்கப்பட்டிருக்கும்.

மோடி குஜராத் முதல்வராயில்லாதிருந்திருந்தால், அவரை ஆசிய - அமெரிக்க ஹோட்டல் சங்கம், அமெரிக்காவுக்கு வருமாறு அழைத்திருக்கப் போவதில்லை; விஸா - நிராகரிப்பு போன்ற பிரச்னைகள் எழாமலே போயிருக்கக் கூடும். அப்படியே எப் பிரச்னை




எழுந்திருந்தாலும், 'ஒரு மக்கள் பிரதிநிதிக்கு விஸா மறுப்பு' என்ற சங்கடமோ, அவருக்கு வக்காலத்து வாங்கும் தர்ம சங்கடமோ மத்திய அரசுக்கு ஏற்பட்டிராது.

அமெரிக்கா செய்தது நியாயம் என்பதை நாம் ஒருபோதும் ஒப்புக் கொள்வதற்கில்லை. எத்தனையோ சர்வாதிகாரிகள் அந்நாட்டுக்கு முறையான விஸா பெற்றுச் சென்றிருக்கிறார்கள். அரசு ரீதியான வரவேற்பையும் பெற்றிருக்கிறார்கள். அப்போதெல்லாம் மனித உரிமை மீறல் பற்றி அந்நாடு கவலைப்படவே இல்லை. மோடிக்கு மட்டும், தான்தோன்றித்தனமாக விஸா மறுத்திருக்கிறது.

ஆனால், அமெரிக்கா தனது தான்தோன்றித்தனத்தைக் காட்ட இடமளித்தவர் மோடிதான்; அவருக்கு இடமளித்து, வளர்த்து, பாதுகாப்பும் அளித்து வருகிற பா.ஜ.க தலைமைதான்.

இக் கட்சியின் தலைவர்களிடையேயும் மோடி விஷயத்தில் கருத்து வேறுபாடு இருந்திருக்கிறது. குஜராத் கலவரங்களுக்குப் பிறகு மோடியின் நோக்கையும் போக்கையும் வாஜ்பாய் நிராகரித்துக் கண்டனம் செய்துள்ளார். ஆனால் அத்வானி, மோடியை அரவணைத்து, தவறுகளே நடக்காதது போல் சித்திரிக்கத்தான் முயன்று வந்திருக்கிறார்.

இது மிகவும் துரதிர்ஷ்டவசமான நிலைமை. பாரதிய ஜனதா கட்சித் தலைமை, தனது ஹிந்துத்வ அபிமானத்தைக் கட்டிக் காக்கவும், நியாயப்படுத்தவும் எந்த எல்லைக்கும் போகத் துணியும் என்பதையே உணர்த்துகிறது, மோடிக்கு அது அளித்து வந்துள்ள ஆதரவு.

குறுகிய அடிப்படைவாதத்தைக் களைய மறுப்பதால், அக்கட்சிப் பிரதிநிதி மட்டுமின்றி, இந்திய இறையாண்மையே இன்று அமெரிக்காவால் முகத்தில் அறையப்பட்டிருக்கிறது!

மோடிக்கு விசா மறுப்பு இந்தியாவுக்கு ஏற்பட்ட அவமானம் எனில், அதற்கு முதல் காரணம் மோடியேதான். அடுத்த காரணம்தான் அமெரிக்கா. ○

–கொதிக்கிறார் ராமதாஸ்

டாக்டர் ராமதாஸ், தொல். திருமாவளவன், பழ. நெடுமாறன் ஆகியோர் திருச்சியில் கூடி, மூன்றாவது மொழிப் போருக்கு அழைப்பு விடுத்திருக்கிறார்கள்! எதற்காக இந்தப் போர்?

"தமிழகத்தில் கல்வித் துறையில் ஆங்கிலம், வழிபாட்டுத் தலங்களில் சமஸ்கிருதம், இசை அரங்குகளில் தெலுங்கு, மத்திய அரசுத் துறைகளில் இந்தி ஆதிக்கம். இந் நிலையை மாற்றி தேமதுரத் தமிழோசை, உலகமெல்லாம் கேட்பதற்கு முன், தமிழகம் முழுதும் எல்லாத் துறைகளிலும் ஒலிக்க வேண்டும் என்பதற்காகவே இந்த மூன்றாவது மொழிப் போர்" என்கிறார் ராமதாஸ். அவருடனான பேட்டியிலிருந்து



# தமிழனைச் சுரண்டும் தமிழ்ப் படங்கள்!

**தமிழ்மொழியை ஒரு பாடமாகக் கூடப் பயிலாமல் பட்டம் வாங்கும் இழி நிலை தமிழகத்தில் இருப்பதாகச் சொல்கிறீர்கள். நீங்கள் மத்தியில் ஆட்சிப் பொறுப்பில் பங்கு வகிப்பதால், குறைந்த பட்சம் மத்திய அரசுப் பள்ளிகளில் (கேந்திரிய வித்யாலயா) தமிழை ஒரு பாடமாக வைக்க முயற்சி செய்யலாமே?**

"தமிழைச் செம்மொழியாக அறிவிக்க வைத்தோம். நீங்கள் சொல்வது போலவே கேந்திரிய வித்யாலயா பள்ளிகளில் தமிழைப் பயிற்றுவிக்க முயற்சிகள் எடுப்போம்.

**நீங்கள் மேற்கொண்ட தமிழ்ப் பாதுகாப்பு ஊர்திப் பயணம் 'தமிழ் என்ற பெயரில் அரசியல் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளவே' என்ற குற்றச்சாட்டு குறித்து...**

"தமிழ்ப் பாதுகாப்பு இயக்க நிர்வாகிகள் தமிழ்நாட்டில்தானே சுற்றுப்பயணம் செய்து பிரசாரம் செய்ய முடியும்? இது தவிர எதையும் அரசியலாக்கும் அக்கிரமம் தமிழ்நாட்டில்தான் நடக்கிறது. 'கல்கி'யின் ஸ்தாபகர்கள் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர்கள். அப்படியிருக்க, எங்களைப் போன்றவர்களை ஊக்கப்படுத்தும் பொறுப்பு உங்களுக்கு இருக்கிறது.

**தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் கேட்டுக் கொண்டும் கமல் தமது படத்தின் பெயரை மாற்ற மாட்டேன் என்று சொல்லி விட்டாரே...?**

"இது போன்ற கேள்விகளைக் கேட்டு, பரபரப்பான பதிலைப் பெற்று, இயக்கத்தின் நோக்கத்தை திசை திருப்பும் ஊடகங்களின் செயல்பாடுகள் வருத்தத்தைக் கொடுக்கின்றன. தமிழகத்தில் தமிழனின் பொருளாதாரத்தைச் சுரண்ட எடுக்கப்படும் தமிழ்த் திரைப்படங்களுக்கு, தமிழில் பெயர் வைக்கப்பட வேண்டும் என்பது, எங்களின் பத்து கோரிக்கைகளில் ஒன்று. அது ஒன்றே எங்கள் கோரிக்கை என மக்கள் நினைக்கும் வகையில் செய்திகள் போடப்படுவது அநியாயம். எங்கள் வேண்டுகோளை திரைப்பட உலகத்திடம் வைத்திருக்கிறோம். தமிழ் உணர்வுள்ளவர்கள் செவி சாய்ப்பார்கள் என்று நம்புகிறோம். இந்தப் பதிலை திரித்து விடாமல் போடுவீர்கள் என்று நம்புகிறேன்."

- ப்ரியன்



# சூடு பறக்குது!

“டாப் கியரில் கோடை கிளம்பிடுச்சே... ஏ.ஸி வியாபாரம் எல்லாம் எப்படி இருக்கு?'' என்று சென்னை, தி.நகர் ராஜாபாதர் தெருவில் உள்ள ரத்னா ஃபேன் ஹவுஸ் உரிமையாளர் கே.எஸ். கிருஷ்ணமூர்த்தியிடம் கேட்டபோது,

“தினமும் எழுபத்தைஞ்சு ஏ.ஸி விற்பனையாகுது'' என்று கூலாகத் தெரிவித்தார். “சில வருடங்களுக்கு முன்பு ஏ.ஸி வாங்குவது கெத்துப் பிடிச்ச ஆடம்பரம். ஆனால் இப்போது பருப்பு, புளி மாதிரி அடிப்படைத் தேவை ஆயிடுச்சு. நானூறு சதுர அடி வீட்டில்கூட விண்டோ ஏ.ஸி ‘புர்' என்கிறது. காரணம் மகா ஜனங்கள் அறிந்ததே! அடைசலான தெருக் கள், தீப்பெட்டி ஃபிளாட்டுகள், ஓவர்டைம் செய்யும் சூரியன்... இன்ன பிற இன்ன பிற!



• உரிமையாளர்களுடன் சச்சு...

“எங்களிடம் ஏ.ஸி வாங்க வரும் வாடிக்கையாளர்களிடம் படுக்கை அறையின் அளவு என்ன என்று விசாரிப்போம். அதற்கேற்ற திறன் உள்ள ஏ.ஸியை பரிந்துரைப்போம். விண்டோ ஏ.ஸி சற்று விலை குறைவு என்பதால், முதலில் அதைத்தான் தேர்வு செய்வார்கள். ஆனால், விண்டோ ஏஸியைவிட, ஸ்பிளிட் ஏ.ஸிதான் சிறந்தது என்று எடுத்துச்சொல்வோம். அப்புறம் அவங்க சாய்ஸ்!''

“ஸ்பிளிட் ஏ.ஸியில் அப்படி என்ன சிறப்பு?''

“அறையின் மூலைக்கு மூலை கூலிங் பரவலாக இருக்கும். சத்தமே இருக்காது. ஜன்னலை இழக்க வேண்டாம். மின்சக்தி அதிகம் இழுக்காது. பார்வைக்கும் அழகு... இப்படி நிறைய.''

“இயற்கையான தட்பவெப்பத்தை விட்டு, இப்படி ஏ.ஸிக்கு மாறுவது சரிதானா?''



# சிம்பு டிக்ஷ்னரி!
## (வம்பு விளக்கங்களுடன்)

**திருமணம்:** இதில் ஓர் ஆண், தன் பாச்சுலர் டிகிரியை இழக்க, பெண்ணோ மாஸ்டர்ஸ்தான்... கியாரண்டி!

**காதல்:** விரித்தவனே மாட்டிக் கொள்ளும் விசித்திர வலை!

**ஆபீஸ்:** ஏகமாக வீட்டில் வேலை செய்து களைப்பு தீர ஓய்வு பெறும் இடம்

**க்ளாஸிக்:** பரவலாகப் புகழ் பெறும் புத்தகம். யாரும் படிப்பது கிடையாது.

**அகராதி:** மேரேஜுக்கு முன்னால் 'டைவர்ஸ்' வரும் இடம்.

**கான்ஃபரன்ஸ் ரூம்:** எல்லோருமே பேசுமிடம்; யாருமே காது கொடுத்துக் கேட்க மாட்டார்கள்... கடைசியில் யாரும் யாருடைய கருத்துடனும் ஒத்துப் போகாமல் ஒற்றுமையாகப் பிரியுமிடம்.

**புன்சிரிப்பு:** ஒரு சின்ன வளைவு... இதனால் ஏகப்பட்ட கோணல்களைச் சரி செய்ய முடியும்.

**அப்பா:** இயற்கை வழங்கிய நடமாடும் வங்கி.

**பாஸ்:** நீங்கள் லேட்டாகப் போனால் சீக்கிரமாக வந்து... நீங்கள் படு சீக்கிரமாக போனால் லேட்டாக ஆபீஸுக்கு வரும் விசித்திரப் பிறவி.

**கருமி:** பணக்காரனாக சாக வேண்டும் என்ற ஒரே அவாவினால் உயிருள்ளவரை பரம ஏழையாக இருக்கும் ஜீவன்!

**க்ரிமினல்:** எல்லோரையும் போல பொதுஜனம்தான்... ஒரே வித்தியாசம்... பிடிபடுவது.

தொகுப்பு: **லதா சேகர்**

"ஆபீஸில் ஏ.ஸி... காரில் ஏ.ஸி என்றே ஜனங்க பழகிட்டாங்க... வீட்டுல அனலடிச்சா, தூக்கம் வராம அவஸ்தைப்படறாங்க! அதுமட்டுமல்ல! இப்பல்லாம் ஜனங்களோட வாழ்க்கைக் கண்ணோட்டமே மாறிடுச்சு! நிறைய சம்பாதிக்கிறாங்க. அதனால சௌகரியமா வாழப் பிரியப்படறாங்க! ஏ.ஸியின் விலை குறைஞ்சதும் முக்கியக் காரணம். பதினையாயிரத்துல இருந்து, இருபதாயிரம் ரூபாய் வரை கிடைக்குது. வட்டியில்லா கடன் வசதி இருக்கு. வாங்கின நாலு மணி நேரத்துல கஸ்டமர் வீட்டுல பொருத்திக் கொடுத்துடறோம். எங்களிடம் வாங்கும் ஏ.ஸிக்கும் ஸ்டெபிலைஸருக்கும் ஐந்து வருட உத்திரவாதம் உண்டு. ஏஸியுடன் தரமான ஸ்டெபிலைஸரும் இலவசமாகத் தருகிறோம். அதனாலே ஈஸியா ஏஸி வாங்கிடறாங்க" என்றார்.

"சைனா ஏ.ஸி எல்லாம் நிறைய வர ஆரம்பிச்சுடுச்சே!"

"அவையெல்லாம் யூஸ் அண்ட் த்ரோ வகையைச் சேர்ந்தவை. ஸ்பேர்ஸ் கிடைக்காது. சர்வீஸ் வசதி இருக்காது. பழுதானால், தூக்கிக் குப்பையிலே போட வேண்டியதுதான். இது நம்ம ஜனங்க மனோபாவத்துக்கு ஒத்து வராது. ஒரு பிளாஸ்டிக் வாளி ஓட்டையானாலும், பத்த வைச்சு பயன்படுத்துற டைப் நாம்ப! அதனால, சாம்ஸங், ஹிடாச்சி, கேரியர், எல்.ஜி. ஓஜி போன்ற சர்வதேசத் தரம் வாய்ந்த ஏஸிகளை வாங்குவதே நம்பகமானது. பிரச்னை இல்லாதது" என்றார் கே.எஸ்.கேயின் மகன் விஜய்.

**நா**ம் சென்ற அன்று ஏ.ஸி வாங்க நடிகை சச்சுவும் வந்திருந்தார்.

"ஏ.ஸி விளம்பரத்துல நடிச்சுட்டு, நானே வாங்காமல் இருந்தா எப்படி?" என்று சொல்லிக் கொண்டிருந்தார் சூழ்ந்து கொண்ட விசிறிகளிடம்!

- **மினி**

# நாட்பட்ட எக்ஸிமா, சொரியாஸிஸ், வெண்சர்மநோய் கடி, தோல்புற்று நோய் – போன்றவைகளுக்கு



## தெய்வீக மூலிகை மருத்துவத்தின் அற்புதம்!

நாம் உட்கொள்ளும் உணவுகளில் கசப்பு சுவையுள்ள உணவுகளை முற்றிலும் தவிர்ப்பதால் நோய் எதிர்ப்பு சக்தி குறைந்து, நோய்க் கிருமிகள் நம் உடலில் அதிகமாகி பலநோய்கள் தோன்றுவதற்கு முக்கிய காரணங்களாகின்றன. இவற்றில் தோல் நோய்களும் விதி விலக்கல்ல. தோல் நோய்களில் பல வகைகள் உள்ளன. எல்லா வகை தோல் நோய்களும் நோய்க் கிருமிகளால்தான் தோன்றுகின்றன. மற்றும் சுகாதாரமின்மை, பல நோய்களுக்காக எடுக்கப்படும் வீரியமிக்க மருந்துகளின் பக்க விளைவுகளினாலும், பலவிதமான இரசாயன தொழிற்சாலைகளில் பணிபுரிபவர்களுக்கும் சுகாதாரமற்ற சுற்றுப்புற மக்களுக்கும் பெரும்பாலும் இந்நோய் வருகின்றன.



**எக்ஸிமா :** இது தோலினை மேலோட்டமாக பாதிக்கிறது. பெரியவர்களை அதிகம் பாதிக்கும் சில வகை பொருட்களை உட்கொள்வதாலோ, அல்லது உபயோகிப்பதாலோ ஏற்படும் அலர்ஜியினால் தோலில் சிறிய கொப்புளங்கள் தோன்றுதல், அரிப்பு, கொப்புளங்களில் இருந்து நீர் வடிதல், தோல் சிவந்தும், தடிப்புடன் காணப்படுதல் போன்ற அறிகுறிகள் இருக்கும். மேலும் குழந்தைகளுக்கு முகம், கழுத்து, முழங்கை மடிப்பு, கால் முட்டி போன்ற இடங்களில் சிவப்பு நிற தடிப்புகள், மற்றும் சிறிய கொப்புளங்கள் தோன்றும் இது உடல் முழுவதும்கூட ஏற்பட வாய்ப்புள்ளது.



**சொரியாசிஸ் :** இந்நோய் இளம் வயதினரை அதிகம் பாதிக்கும். இந்நோய் உள்ளவர்களின் தோல் மிகவும் வறட்சியாக காணப்படும். சொறிந்தால் செதில் செதிலாக உதிரும். அரிப்பு இருக்கும். சிவப்பு நிற கொப்புளங்கள் தோன்றும். கிள்ளினால் இரத்தம் வரும். மேலும் உடலின் மடிப்பு பகுதிகளான முழங்கை மூட்டு, முழங்கால் மூட்டு, நகங்கள், உள்ளங்கை போன்ற பகுதிகளில் சொரியாஸிஸ் தோன்றுகிறது. இந்நோயை கவனிக்காவிட்டால் சொரியாடிக் ஆர்த்தரைட்டிஸ் எனப்படும் மூட்டுவலி தோன்றவும் வாய்ப்புண்டு. இது பரம்பரையாகவும் உடலில் உள்ள வேதிப் பொருட்களின் மாற்றத்தாலும் ஏற்படும்.

**வெண் சர்ம நோய் :** இது ஆண் பெண் எல்லோருக்கும் பரவலாக தோன்றுகிறது. முதலில் உதடு, கைவிரல்களின் நுனி, முகம், நெற்றி, முன்கை, உடலின் நடுப்பகுதி, இனப் பெருக்க உறுப்புகள் போன்ற பகுதிகளில் வெண் புள்ளிகள் தோன்றும். பின் உடல் முழுவதும் வெண்படையாக மாறிவிடும். இதனால் உடல் நலத்திற்கு கேடு இல்லை. ஆனால் பார்ப்பதற்கு மட்டும் அசிங்கமாக இருக்கும். இது நமது தோல் முழுவதும் மெலனோ சைட்டுகள் என்ற செல்கள் உள்ளன. இச்செல்கள் தோலுக்கு கருமை நிறத்தை கொடுக்க கூடிய மெலனின் என்ற நிறமியை உற்பத்தி செய்கின்றன. சில காரணங்களால் மெலனின் உற்பத்தி பாதிக்கப்படும் அளவை பொறுத்து இந்நோயின் பாதிப்பும் தெரியும்.

**தோல் புற்று நோய் :** அடிக்கடி தோலில் ஏற்படும் காயங்கள், இவற்றில் ஏற்படும் தழும்புகள், நீண்ட காலம் வேதிப் பொருட்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளில் பணி புரிதல், ரேடியேசன்படுதல் போன்றவற்றால் தோல் புற்று நோய் வரலாம். இதனால் ஆறாதபுண், தோலின் மீதுள்ள மச்சம், மரு இவைகளில் மாற்றம் ஏற்படுதல், உடலின் எப்பகுதியிலாவது வலியுள்ள அல்லது வலியற்ற கட்டிகள் தோன்றுதல், இவைகளின் அளவு பெரிதாகுதல், தோலிலுள்ள மருவில் இரத்தம் அல்லது நீர் வடிதல் இருந்தால் தோல்புற்று நோய் வரலாம்.

மேலும் சொரி சிரங்கு, தேமல், புண்கள் தோன்றுதல் போன்றவைகளும் தோல் நோய்களில் ஒன்றாகும். 'தோல் நோய்களுக்கான தெய்வீக மூலிகைகள்' வேப்பிலை, வில்வம், துளசி, அருகம்புல், கீழாநெல்லி, பூவரசன், குப்பைமேனி, கடுக்காய், நெல்லி, பரங்கிப்பட்டை அரசயிலை, ஆவாரம்பூ தும்பையிலை ஆகியவைகளை பொடியாக்கி சம அளவில் ஒன்றாக கலந்து வைத்துக்கொள்ள வேண்டும். பின் இவற்றில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் நோய்க்கு தகுந்தவாறு நான்கு முதல் ஆறு மாதம் வரை உட்கொண்டால் எல்லாவிதமான தோல் நோய்களும் படிப்படியாக குணம் பெறலாம். இவைகளில் எந்தவிதமான பின்விளைவுகளும் ஏற்படாது.

மேலும் இம்மருந்துகளுடன் பழச்சாறுகளின் குளியல், மூலிகை எண்ணெய் குளியல், மண் குளியல் போன்றவைகளையும் செய்தல் வேண்டும். குளிப்பதற்கு மூலிகைகளால் தயார் செய்யப்பட்ட குளியல் பொடிகள் உபயோகிக்க வேண்டும். இவைகளுடன் நாங்கள் குறிப்பிடும் நோயாளிகளுக்கேற்ற உணவு முறைகள் & உடற்பயிற்சிகளை பின்பற்றினால் எல்லாவிதமான நாட்பட்ட தோல் நோயாளிகளும் குணம் பெறலாம்.

CKM
DIVINE HERBAL CENTRE

*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்**

தலைமை முகவரி : அஞ்சல் பெட்டி 30, எண்.1, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (வ.ஆ.மா.) - 635 601 ✆ : 04179-220469, 222769 Cell : 9443438670

சென்னை முகவரி : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10. ✆ : 044-26424285, 26427638 Cell : 9444161670

டெல்லி கிளை : Mrs.Valli, 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011-25736220 Cell : 9868026743

**மூன்று முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7**

| | | |
|---|---|---|
| **7 & 8** ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), ✆ : 24011589, 24083879 | **9** ந் தேதி - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை. Hotel Ajantha, 22A, Mahatma Gandhi Road, Bangalore - 560 001. ✆ : 2558432I | **20 & 21** ந் தேதி - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011 - 25736220, Cell : 9818209458 |





# விரட்டுங்க

**கொ**ளுத்தும் வெயிலில் அலைந்து, திரிந்து வருபவர்களுக்கு குளிர்ச்சியான ஐட்டம்களைத் தந்து மகிழ வைக்கும் சிலரிடம் "யாவாரம் எப்படி அண்ணே?" என்று கேட்டோம்.

**சுந்தர்** *(இளநீர் வியாபாரம், சென்னை அண்ணாசாலை) :*

"நமக்கு சொந்த ஊரு செஞ்சிங்க. சின்ன வயசுலயே மெட்ராசுக்கு வந்துட்டேன். அப்பப்போ சீஸனுக்கு ஏத்த மாதிரி வேலை செய்வேன். இப்போ வெயில் காலங்கிறதால இளநீர் வியாபாரம் பண்றேன். பொள்ளாச்சி, பாண்டில இருந்து லோடு வரும். பொள்ளாச்சி இளநீர் 15 ரூபா, பாண்டி இளநீர் 10 ரூபா. பொள்ளாச்சி இளநீர் கடைல இருந்தா யாவாரம் தானா வரும். வெறும் பாண்டி இளநீர் இருந்தா நாமதான் கூப்பிட்டுக் கூப்பிட்டு விக்கணும். முக்கியமான பிஸினஸ் நேரம்னா, அது காலைல அஞ்சு மணியில இருந்து பதினொரு மணி வரைக்கும்தான். அதுவும் ஒன்பது மணிக்குள்ள வாக்கிங் போறவங்கதான் நம்ம முதலாளிங்க.." என்று சிரிக்கும் சுந்தருக்கு சாப்பாட்டுச் செலவு போக ஒரு நாளைக்கு நூற்றைம்பது ரூபாய் மிஞ்சுகிறதாம். "சரி... உங்களை கூல் செய்ய என்ன சாப்பிடுவீர்கள்?" என்றால், "காலைல போணி பண்ணின உடனே ஒரு இளநீ... மத்தியானம் ஒரு இளநீ... அவ்ளோதான்" என்கிறார்.

**சுப்ரமணி** *(தர்பூசணி வியாபாரம். வடபழனி பகுதி) :*

**த**ர்பூசணியை அழகாகத் துண்டு போட்டு நம்மிடம் கொடுத்துவிட்டுப் பேசத் துவங்கினார். "பார்க்கறதுக்கு செக்கச் செவேல்னு இருக்கிறதாலதான் இதுக்கு வரவேற்பு ஜாஸ்தி. நீர்ச்சத்து நிறைஞ்சது,



# வெயிலை!

சூடு தணிக்கும். திண்டிவனம், திருப்போரூர்லேந்து லாரில சரக்கு வந்துடும். அழகழகா துண்டு செஞ்சு, கவர்ச்சியா பரப்பி வாங்க வைக்கிறது பெரிய கலை. கார்ல வர்றவங்க ஃப்ரெஷ்ஷா கட் பண்ணிக் கொடுங்கன்னு கேட்பாங்க. இதனால கொஞ்சம் வீணாப் போறதும் உண்டு. இருந்தாலும் பீஸ் இரண்டு ரூபான்னு விற்கறதால லாபம் வந்துரும்'' என்றவரிடம் ''உங்களுடைய கஸ்டமர்கள் யார்?'' என்றதற்கு, ''முழுக்க முழுக்க மார்க்கெட்டிங் எக்ஸிக்யூட்டிவ்ங்கதான். வெயில்ல ஜாஸ்தியா அலையறது அவங்கதானே? அதைத்தவிர குழந்தைகளும் நம்ம கஸ்டமர்கள் தான்'' என்றார் சிரித்துக் கொண்டே.

**துரை** *(கிரணிப் பழ வியாபாரம், அசோக் நகர்) :*

''பப்பாளி, கிரணி, அன்னாசிப்பழம் மூணும் வியாபாரம் பண்றேன். பப்பாளியையும், அன்னாசியையும் சின்னத் துண்டுகளாக்கி பிளாஸ்டிக் கிண்ணத்துல போட்டுத் தருவோம். ஒரு கிண்ணம் அஞ்சு ரூபா. கிரணிப் பழத்தை பீஸாவும் சாப்பிடுவாங்க. சில பேர் வீட்டுக்கும் வாங்கிட்டுப் போய் ஜூஸ் போட்டும் சாப்பிடுவாங்க. இது உடம்புக்கு ரொம்ப குளுமை சேர்க்கும். சளி பிடிக்காது. நார்ச்சத்து கொண்டது. இதுல கிரணிப் பழம் மட்டும் லோக்கல்லயே கிடைக்கும். பப்பாளி ஆந்திராவுல இருந்தும், அன்னாசி கேரளாவுல இருந்தும் வருது. எப்படியும் ஒரு நாளைக்கு நூற்றியிருபது ரூபாயில இருந்து நூற்றியறுபது ரூபா வரைக்கும் கிடைக்கும்'' என்று சொல்லும் துரை, ஒரு நாளைக்கு மூணு கப் பப்பாளி அடிச்சுடுவாராம்.

- இரா. முத்துக்குமார்

படங்கள் : ராஜன்



# பங்குச் சந்தை : வாகனத்தில் போடுங்க!

வி.கோபாலன்



பட்ஜெட்டைத் தொடர்ந்து விறு விறு என்று விலை ஏறிக் கொண்டே வந்த பங்குகள், சில நாட்களாக இறங்கு முகமாக உள்ளன. இதற்கு இரண்டு காரணங்களை முக்கியமாகச் சொல்லலாம். ஒன்று முதலில் ஏற்பட்ட விலை ஏற்றம் அசாதாரணமானது. மத்திய பட்ஜெட்டின் முழு விவரங்களும் தெரிந்த உடன், பங்குகளின் விலை நிலைப்படத் தொடங்கியிருக்கின்றன. மார்ச் மாதம் இந்த நிதி ஆண்டின் முடிவு மாதம். பல பரஸ்பர நிதிகளும், முதலீட்டு நிறுவனங்களும் கம்பெனிகளும், இந்த நிதி ஆண்டுக்கான முழு வருமான வரியைச் செலுத்த வேண்டிய கடைசித் தவணை. இதனால் பங்கு மார்க்கெட்டில் இந்த நிறுவனங்கள் வரி கட்ட வேண்டிய தொகைக்காக பங்குகளை விற்க முன் வந்ததனால்தான், பங்குகளின் விலை ஓரளவுக்கு இறங்குமுகமாக இருக்கின்றன.

எது எப்படியோ! ஒன்று நிதர்சனமாகத் தெரிகிறது. பங்கு மார்க்கெட்டில் பெரிய அளவில் முதலீடு செய்ய எல்லா வகையான முதலீட்டாளர்களும் தயாராக இருக்கிறார்கள். உதாரணத்துக்கு, பஞ்சாப் நேஷனல் வங்கி கூடுதல் மூலதனத்துக்காக வெளியிட்ட பங்குகள். இந்த வங்கி எட்டு கோடி பங்குகளை வெளியிட்டு சுமார் மூவாயிரம் கோடி ரூபாய் எதிர்பார்த்தது. ஆனால் இந்தப் பங்கு விற்பனை முடிவடைந்த தேதிக்குப் பின், பஞ்சாப் நேஷனல் வங்கி ஒரு செய்திக் குறிப்பை வெளியிட்டிருக்கிறது. அதன்படி மொத்தம் 125 கோடி பங்குகளுக்கு 850000 விண்ணப்பங்கள் வந்து குவிந்திருக்கின்றன. விண்ணப்பத் தொகையாக இந்த வங்கி, சுமார் ரூபாய் 48000 கோடிக்கு மேல் திரட்டி இருக்கிறது. இந்த வங்கி இப்போது வெளியிட்ட பங்குகளுக்கு ரூபாய் 390 என்று விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த வங்கியின் பங்குகள் மும்பை பங்கு மார்க்கெட்டில் ரூபாய் 450 - அளவில் விலை போகின்றன.

இன்னொரு சுவையான செய்தி. Jet - Airways நிறுவனத்தின் பங்குகள் பிரதான மார்க்கெட்டுக்கு (Initial Public offer) வந்ததைப் பற்றி முன்பு எழுதியிருந்தோம். இந்தப் பங்குகள் ரூபாய் 1300க்கும் அதிகமாக விலை போகின்றன. ஆக, இந்தப் பங்குகளைப் பெற்றவர்கள் ஒரு பங்குக்கு ரூபாய் 200 அதிகமாகப் பெறும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்கள்!

சென்னையிலுள்ள அசோக் லேலண்ட் ஸ்தாபனம் பல ஆண்டுகளாக லேலண்ட் என்ற பெயரில் பஸ், வேன் மற்றும் லாரிகளை உற்பத்தி செய்து வருகிறது. நம் நாட்டின் தரை வழிப் போக்குவரத்துத் தேவைகளை எடுத்துக் கொண்டால் அசோக் லேலண்ட் உற்பத்தி செய்யும் வாகனங்களுக்கு எதிர்காலத்தில் தேவை கூடும். அதனால் இந்தக் கம்பெனியின் பங்குகளை வாங்கலாம்... ○




## சகல சுகங்களையும், வளங்களையும் தரும்

# திருஅண்ணாமலையில்

# சித்ரா பௌர்ணமியன்று

**நடைபெறும் ஸ்ரீ சிவபஞ்சாட்சர மஹா வில்வ ஹோமத்திலும் (24-4-2005 காலை 6-10), அன்னதான பெருவிழாவிலும் கலந்து கொள்ள அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

**ஸ்ரீ அன்ன பூரணி அன்னதான சேவா டிரஸ்ட் சிவமடத்தில் நடத்தும் 8 ம் ஆண்டு அன்னதான சேவை.**

இமயமலைக்கு ஈடான தெய்வத் திருமலையான திருவண்ணாமலை. ஒளி ஒன்றே கண்கண்ட கடவுளின் வடிவம் என்பதை உணர்த்தும் மலை அண்ணாமலை. ஞானத் தபோதனரை வாவென்று அழைக்கும் மலை அண்ணாமலை. லிங்க சொரூபமாக பிரகாசித்துக் கொண்டிருக்கும் மலை அண்ணாமலை. ஆதித்யனான சூரியனே வலம் வந்த மலை அண்ணாமலை. தவமும் தானமும் செய்யின் அளவற்ற நன்மை அளிக்கும் மலை அண்ணாமலை. சித்தர்கள் நிறைந்திருக்கும் சிறப்பு வாய்ந்த திருஅண்ணாமலையில் கிரிவலம் வரும் இறையடியார்களுக்கும், சாதுக்களுக்கும், பக்தர்களுக்கும் சித்ரா பௌர்ணமி அன்று அடி அண்ணாமலையில் உள்ள ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட் மூலம் நடத்தப்படும் சிவமடத்தில் அன்னதானம் செய்யப்படுகிறது. இப்புனிதமான சித்ரா பௌர்ணமி நாளில் நடைபெறவிருக்கும் மாபெரும் அன்னதான பெருவிழாவில் கலந்து கொண்டு ஸ்ரீ அண்ணாமலையார் சமேத ஸ்ரீ உண்ணாமுலையாரின் இறையருளை பெற அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

**எல்லாம் அவன் செயல்! அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்ற நியாய நம்பிக்கையில் ஸ்ரீ அண்ணாமலையாரின் பரிபூரண அருளைப் பெறுவதற்காக 'ஆன்மீக' தெய்வீக மாத இதழ் சார்பாக ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று வேத சாஸ்திரங்களில் பாண்டித்யம் பெற்ற விற்பன்னர்களைக் கொண்டு ஸ்ரீ சிவபஞ்சாட்சர மஹா வில்வ ஹோமம் அடிஅண்ணாமலையில் நடைபெறும்.**

[illegible]

மேலே குறிப்பிட்டுள்ள ஹோமத்தில் பங்குபெற 1 மாத சங்கல்ப கட்டணம் ரூ.300/- 12 மாதங்களுக்கு ரூ.3,000/- செலுத்தி முன்பதிவு செய்து கொள்ளவும்.

அன்னதானத்திற்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீக மாத இதழ் மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஐந்து வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

**அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் திருக்கோவிலில் பூஜிக்கப்பட்ட வலம்புரிசங்கும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.**

ரூ.5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, சித்ரா பௌர்ணமி அன்று சிவமடத்தில் நடைபெறும் ஸ்ரீ சிவபஞ்சாட்சர மஹா வில்வ ஹோமத்தில் சங்கல்பம் செய்து, அன்னதானம் செய்து ஹோமத்தில் வைத்து பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அண்ணாமலையார் யந்திரம், ஸ்ரீ அண்ணாமலையார் வெள்ளி டாலர், அட்சதை, மஞ்சள் ரட்சை, குங்குமம், ஹோம பஸ்பத்துடன் தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் தங்களுக்கு ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் ஒவ்வொருவரின் இல்லங்களும் மங்களம் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு ரூ.5000- செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீ மத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று நடைபெறும் அன்னதானத்திற்கும் ஹோமத்திற்கும் சமித்து, பலசரக்கு மற்றும் பொருட்கள் சிவமடத்தில் நேரில் கொடுக்கலாம்.**

இந்த அன்னதானத்திருப்பணி மற்றும் ஹோமத் திருப்பணி (திருக்கோவிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீக இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் ஈடுபட்டு தொண்டு புரிந்து வரும் அனைத்து அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

**அன்னதானம், ஹோமத்திற்கு தாங்கள் அனுப்பும் நன்கொடையை Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 என்ற பெயரில் Cheque / D.D/ M.O. மூலம் 68, நடுத் தெரு, மயிலாப்பூர், சென்னை - 4 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.**



நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு

# சிவ மடம்

கிரிவலச் சாலை, அடி அண்ணாமலை (P.O.) திருஅண்ணாமலை - 606 604.


Cheque / D.D. / M.O., கடிதங்கள் அனுப்ப வேண்டிய அலுவலக முகவரி:

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street (Opp. Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 4.

Tel : 044 - 2495 9302 Fax : 044 - 5206 6525 E-mail : Sivasiva@vsnl.net




எதுவும் என்னுடையது அல்ல! அனைத்தும் உன்னுடையதே அருணாசலா!! அருணாசலா!!!




டிக்ஸ் துறை வடிவேலு மீது வழக்குத் தொடர்ந்துள்ளது.

**தலைப்புச் செய்தி - 3**

**'லண்டன்' படம் பார்த்த ரசிகர்கள் மருத்துவமனையில் அனுமதி:**

'லண்டன்' படத்தில் நெஞ்சு வலி என்று டபாய்த்து, வங்கிக் கொள்ளைத் தலைவர் மணிவண்ணன் மருத்துவமனைக்கு வர, அங்கே பிரசாந்த், வடிவேலு, பாண்டியராஜன், டெல்லி கணேஷ், மயில்சாமி என ஒட்டு மொத்த நடிகர்களும் வெவ்வேறு காரணங்களால் உள்ளே நுழைய, மருத்துவமனை வளாகம் கலகலப்பில் அல்லோலகல்லோலப்படும் காட்சிகளை தியேட்டரில் விழுந்து விழுந்து ரசித்த ரசிகர்களுக்கு சுளுக்கு, பிடிப்பு, சிராய்ப்பு ஏற்படுகின்றன. இவர்களுக்கு முதலுதவி அளிக்க தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், 'லண்டன்' படம் ஓடும் திரையரங்குகளின் முன்பு மருத்துவக் குழுவோடு, ஆம்புலன்ஸ் வண்டிகளைத் தயாராக நிறுத்தி வைத்துள்ளனர்.

**தலைப்புச் செய்தி - 1**

**லண்டன் போலீசார் சென்னையில் முகாம்! சுந்தர். சி வீட்டைச் சுற்றி வளைத்தனர்!**

சமீபத்தில் வெளிவந்து ஓடிக் கொண்டிருக்கும் 'லண்டன்' என்ற காமெடிப் படத்தை இயக்கியிருப்பவர் சுந்தர். சி. மேற்படி திரைப்படத்தில் ஒரு சொதப்பலான வங்கிக் கொள்ளையைத் துப்பறிய, துப்பில்லாத வெண்ணெய் வெட்டிகள் என்பது போல தங்களைச் சித்திரித்து விட்டதாகவும், உலகிலேயே சிறந்த போலீஸ் 'ஸ்காட்லாந்து யார்டு' என்ற பெருமையை பப்படம் போல் பொறித்து விட்டதாகவும் லண்டன் போலீஸார் தொண்டை கம்மிய படி தெரிவித்தனர்.

**தலைப்புச் செய்தி - 2**

**லண்டன் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகம், நடிகர் வடிவேலு மீது திடீர் வழக்கு!**

'லண்டன்' படத்தில் "எச்யூச்சுமி" என்று ஆங்கில மொழியை கடித்துக் குதறிக் கொண்டே, லண்டன் உயர்நீதிமன்றத்தில் பிரபல வழக்கறிஞராகப் பணிபுரிவது போல் நடித்திருப்பதைக் கண்டித்து, ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தின் லிங்குவிஸ்

**தலைப்புச் செய்தி - 4**

**புதுமுக நடிகை அங்கிதாவுக்கு பருத்திப் போர்வை பரிசு! மகளிர் அமைப்பு அதிரடி!**

லண்டன் படநாயகி, அங்கிதா தன் பெயரிலேயே ஓர் அங்கி - தா! என்ற அர்த்தம் கொண்டிருந்தும், பல காட்சிகளில் கைக்குட்டை அளவு துணியுடன் நடித்திருப்பதால், நொந்து போன மாண்புமிகு மகளிர் சங்கங்கள், அவருக்கு முழுநீள பருத்திப் போர்வையை பரிசாக வழங்கி, அன்புடன் மிரட்டியுள்ளன.

- விஷுவல்தாசன்

# ரஜினியுடன் மோதல் ஏன்?



திரையுலகை மட்டுமல்ல, ஒட்டுமொத்தத் தமிழகத்தையும் தமது 'மாயாவி' பட விளம்பர யுக்திகளால் அண்ணாந்து பார்க்க வைத்த கலைப்புலி எஸ்.தாணு, அடுத்ததாக 'சச்சின்'னையும் தூள் பரத்தத் தயாராகி விட்டார்.

"தமிழ்ப் புத்தாண்டு அன்று ரிலீஸாகும் சச்சினுக்கு 'சந்திரமுகி'யைக் கண்டு பயமில்லையா?" என்றவுடன் மளமளவெனத் தமது உணர்ச்சிகளைக் கொட்டினார்.

"தாணு படம் என்றாலே அதில் பிரம்மாண்டத்துக்கும் விறுவிறுப்புக்கும் பஞ்சம் இருக்காது. 'சச்சின்'னும் ஒரு கேட்சி டைட்டில். ஆறிலிருந்து அறுபது வரை ரசிக்க வேண்டும் என்று யோசித்துதான் 'சச்சின்' என்று பெயர் வைத்தோம்.

விஜய்க்கு ஜோடியாக இதுவரை அவருடன் நடிக்காத நடிகையாகத் தேடி, தேர்வானவர்தான் ஜெனிலியா. இயக்குனர் மகேந்திரனின் மகன் ஜான், தமிழ் சினிமாவில் புதிய பரிணாமம் கொண்டு வரப் போகிறார். சச்சினை கமர்ஷியல் கவிதையாகச் செதுக்கியிருக்கிறார்" என்றவரிடம் பிபாஷா பாசு பற்றிக் கேட்டோம்.

"தமிழில் பலர் முயற்சித்தும் ஒப்புக் கொள்ளாமல் இருந்தவர், எங்கள் படத்துக்கு மட்டும் சம்மதித்த காரணம், கதைதான். படத்தில் அவர் வரும் இருபது நிமிடங்கள் கலகல என இருக்கும்.

எல்லாம் சரி, சந்திரமுகியோடு நேரடிப் போட்டி தேவையா?

இதில் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமேயில்லை. படப் பூஜையின் போதே ரிலீஸ் தேதியைச் சொல்லித்தான் ஆரம்பித்தேன். 'பாபா' ரிலீஸின் பொழுதுதான் வேறெந்த படமும் ரிலீஸாகவில்லை. மற்றபடி அதற்கு முன்னர் எத்தனையோ முறை ரஜினி படம் ரிலீஸான தினமே பல படங்களும் ரிலீஸாகி, வெற்றியும் பெற்றுள்ளன. இதனால் 'சந்திரமுகி'யைக் கண்டு எந்த பயமும் இல்லை. 'சச்சின்' தன் பெயருக்கேற்றாற் போல் தமிழ்ப்புத்தாண்டு அன்று இமாலய சிக்ஸர் அடிப்பார் பாருங்கள்."

- சநகன்



# சின்னான் செய்திகள்

தேவையான சமயத்தில் 'துர்க்கை'யா மாறறுதுல தப்பில்லைங்க!

'மிஸ்டர் மாவளவன்' - உங்களுக்கு ஒரு கேள்வி. கடைசியில கேட்கறேன். முடிஞ்சா பதில் சொல்லுங்க.

"தி.மு.க. ஆட்சியில் எண்ணெயும், வெண்ணெயும் வழிந்தோடும் சாலைகள் இருந்தன. அ.தி.மு.க. ஆட்சியில் சாலைகள் பல்லாங்குழிகளாக இருக்கின்றன." அப்படின்னு சட்டசபையில சவுண்ட் விட்டிருக்காரு துரைமுருகன். தி.மு.க. ஆட்சியில வீடுகளில் விளக்கெரிஞ்சுது. இந்த ஆட்சியில் மக்கள் வயிறு எரியுது. தி.மு.க. ஆட்சியில் 'சுபிட்சம்' கிடைச்சுது. இந்த ஆட்சியில் 'சுனாமி' கிடைச்சுது. இதெல்லாம் அவர் சொல்ல மறந்த டயலாக்ஸ். இதே வேலையாப் போச்சு. புகழ்றது, இகழ்றது, சட்டசபையை விட்டு நகர்றது. இதுதான் நிகழ்றது. சட்டசபையை 'சத்த சபை'ன்னு பேர் மாத்திடலாம். ம்ஹூம்... மக்களுக்கு சுத்தமா உதவாத 'சொத்த சபை'ன்னு சொல்றதுதான் கரெக்ட்.

சென்னை வளசரவாக்கம் பஸ் ஸ்டாப்பில் அன்னலட்சுமி செயினை திருடன் பறித்துக் கொண்டு ஓட, பதறாத அன்னலட்சுமியும், பி.டி.உஷாவாக துரத்த ஆரம்பித்திருக்கிறார். 'என்னையா இது, பொம்பளை ஓடுறாளே'ன்னு பொது மக்களும் திருடனைத் துரத்தியிருக்காங்க. அப்புறமென்ன... ஒரே 'பின்னல்'தான். ஆத்தா.. நீ அன்னலட்சுமி இல்ல. தைரிய லட்சுமி, வீரலட்சுமி எல்லாம் கலந்த 'சொர்ணாக்கா'. ஹலோ 'லட்சுமி' வகையினரே...



வீட்டுக்கு ஒரு கிழவி வருவா. சாப்பாடு கேட்பா. கொடுக்காட்டி, 'ஒரு வெங்காயமாவது தாங்க'ன்னு கேட்பா. அப்புறம் வீட்ல சுவர்ல மஞ்சள் குங்குமத்தோட அவ கைரேகை இருக்கும். வீட்ல வாசல்ல வெங்காயம் ரெண்டு துண்டாக கிடக்கும். அவ்ளோதான்! உங்க வீட்டுல உள்ளவங்களுக்கு ஆபத்து வந்துடும். அவ சூன்யக்காரி அப்படின்னு டில்லி புறநகர்ப் பகுதிகளில் கிலோ கணக்குல வதந்தி நடமாடுதாம். யாராவது கிழவியைப் பாத்தாலே கிலி பிடிச்சுடுதாம் மக்களுக்கு. "எவளோ ஒருத்தி கையை வைச்சுக்கிட்டு சும்மா இல்லாம, அங்கங்க பதிச்சிட்டுப் போயிட்டாள். எல்லாம் போலிச் சாமியார்களோட வேலை"ன்னு போலீஸ் எடுத்துச் சொல்லியும், ஜனம் - மனம் மாறவில்லையாம். விளைவு... இப்ப நூத்துக்கணக்குல போலிச்சாமியார்கள் தங்கள் கைரேகையை ஜெயில் கம்பிகளில் பதிச்சுக்கிட்டு இருக்காங்களாம். அடப்பாவி மக்கா! உண்மையைத் தவிர மத்த எல்லாத்தையும் நம்பி நாசமாப் போறீங்களே!

ஓ.கே. 'மிஸ்டர் மாவளவன்'... 'சந்திரமுகி' வட மொழிச் சொல். அதையும் மாத்தணும்னு பேசிட்டீங்க. தமிழ்லயே பேர் வைச்சாலும், 'சப் போஸ் உன்னைக் காதலிச்சு', 'கமான்... கமான்'ன்னு ஆங்கில வரிப் பாடல்களும், 'முகம் சுளிக்க வைக்காத', 'கலாசாரத்தை கட்டிக் காக்குற' காட்சிகளும் படத்துக்குள்ள வருதே. அதுக்கு என்ன செய்யப் போறீங்க? 'தமிழ்' நாடே உங்க பதிலுக்கு காத்துக்கிட்டு இருக்கு.

# பளீர் இளமைத் தொடர் 13

**நா**கரத்தினம் மற்றவரை அழிக்கத் தீர்மானிக்கும் போது திறமையாகச் செயல்படுவார். அவரிடம் ஒரு துருப்புச்சீட்டு இருந்தது. அதன் பெயர் வதந்தி அல்லது உள்தகவல். அதை எப்போது விளையாடுவது என்பதைத்தான் இன்னும் அவர் தீர்மானிக்கவில்லை. அதற்கான தகவல்கள் சில இன்னும் கிடைக்க வேண்டியிருந்தன. இன்சாஃப் கம்பெனியின் குடும்பத்தில், இன்று எப்படி, யாரிடம், எவ்வளவு பங்குகள் என்கிற விவரம் தேவைப்பட்டது. அது கம்பெனி செகரட்ரி விஷ்ணுவர்த்தனிடம் உள்ளது. வருடாந்திர ஜெனரல்பாடியிலும், அந்த விவரம் தர வேண்டும். அதற்கு இன்னும் நாளாகும். இப்போது கேட்டால் ''நிறைய ஸ்டாக் ட்ரான்ஸ்ஃபர் இன்னும் செய்ய வேண்டியுள்ளது. தகவல் புதுப்பிக்கப்பட நாளாகும்" என்றார்கள்.

ஓரளவுக்கு மேல் இதை விசாரிக்கவும் அவருக்கு விருப்பமில்லை. அவர் திட்டம் வெளிப்பட்டுவிடும். இன்சைடர் டிரேடிங் என்பார்கள். இன்சாஃப் ஷேர் விலை உச்சத்தில் இருக்கும் போது விற்றுவிட்டு, 'ராகவேந்தர் உடல்நிலை கவலைக்கிடம், ரொம்ப நாள் தாங்க மாட்டார்' என்ற வதந்தியைக் கொண்டு வந்து, ஸ்டாக் விலை சரிய, பலர் மளமளவென்று விற்றுவிட, மீண்டும் இன்சாஃப் ஸ்டாக்குகளை ஓரிரு கூட்டு சதிகாரர்களுடன் வாங்கிக் கொண்டு, போர்டை மாற்றிப் போட்டு சேர்மன், மேனேஜிங் டைரக்டர் பதவி இரண்டையும் கைப்பற்றுவது. இது தான் அவர் திட்டம்.

**டா**க்டர் பாலா. சௌகரியமான கெஸ்ட் ஹவுசில் தங்கினார்.



அங்கிருந்து மினர்வா ஆஸ்பத்திரிக்கு போன் செய்து, தான் வந்திருப்பதாகத் தகவல் கொடுத்தார். ஆபீசுக்குச் சொல்லி செல்போனில் சிம் கார்டு மாற்றிக் கொண்டார். மகனுக்கும் தற்காலிகமாக ஒரு செல்போன் தரச் சொன்னார்.

விஜி முதலில் கூப்பிட்டது மஞ்சரியை.

"ஹாய்."

"ஹூ இஸ் திஸ்!"

"கெஸ்."

மஞ்சரி அழகேசனுடன் திருவான்மியூரிலிருந்து திருப்போரூர் செல்லும் பஸ் புறப்படக் காத்திருந்தாள். அழகேசன் அவளிடமிருந்து செல்போனை வாங்கி "யோவ், எங்களுக்கு வங்கிக்கடன் தேவையில்லை. சுப்ரீம் கோர்ட்டு, இம்மாதிரி தொந்தரவு செய்யறது சட்ட விரோதம்னு சொல்லியிருக்கு. விஜெ...? அவளுக்கு வீடியோ ஜாக்கி யாரையும் தெரியாது."

மஞ்சரி "மரமண்டை, அது என் அமெரிக்கா மாப்பிள்ளை" என்று போனைப் பிடுங்கி,

"விஜி, எப்ப வந்தே?"

"நேத்து ராத்திரி. யார் அந்த மோரான்? (படு முட்டாள்)"

"ஒரு ஃப்ரெண்ட்."

"ஹி இஸ் நாட் மை ஃப்ரெண்ட். பாரு, இப்ப மணி என்ன, சரியா பன்னிரண்டரைக்கு யு ஆர் ஜாய்னிங் மி ஃபார் லஞ்ச், புரிஞ்சுதா?"

"விஜய் நான் இப்ப..."

"நோ எக்ஸ்க்யூஸஸ். நான் இருக்கப் போறது ஒரு வாரம். அதற்குள் நான் உன்னை அறிந்து கொள்ள வேண்டும். நீ என்னை. வி ஆர் கெட்டிங் மாரிட், ஃபார்



# உள்ளம் துறந்தவன்

## சுஜாதா

காட் லேக்!"

"விஜய் விஜய், சொல்றதைக் கேளு."

அழகேசன் அவளையே பார்த்துக் கொண்டிருக்க,

"வெச்சுட்டான்" என்றான்.

"அவனைச் சந்திக்கணும். போகலைன்னா, வீட்ல ப்ராப்ளம் ஆய்டும்."

"நோ ப்ராப்ளம்."

"அழகி, நான் இன்னொரு தடவை வந்து உங்கம்மாவச் சந்திக்கிறேன், ப்ளீஸ்."

"ஓ நோ ப்ராப்ளம். அமெரிக்கா அழைக்கிறது. போய் வா மகளே!"

"கோபமா?"

"இல்லை. பொறாமை!"

ஹ்ர்ர்ர்ர்

அவன் செல்போன் மறுபடி ஒலித்தது.

"மஞ்சரிங்களா? நான் சரவணனுங்கோ"

"ஏய், சரு, எப்ப வந்தே?"

"காலைல ப்ளு மவுண்டன்ல... உங்களுக்கு ரொம்ப சந்தோச சமாசாரம்"

"என்ன பாஸ் பண்ணிட்டியா?"

"உங்களுக்கு என்ன கலர் பிடிக்கறாப்பல?"

"எதுக்குக் கேக்கறாப்பல?"

"அட, நிச்சயதார்த்தத்துக்கு பட்டுச் சேலை எடுக்கறாப்பல!"

"யாருக்கு?"

"நமக்குத்தான். வேற யாருக்கு?"

போனை மடக்கிய மஞ்சரி திகைத்துப் போனாள்.

"ஏதாவது துக்கச் செய்தியா? விஜிக்கு ஹார்ட் அட்டாக்கா?"

"இது சரவணன், கோயமுத்தூர் மாப்பிள்ளை."

"ஓ க்ரேட். தி மோர் தி மெர்ரியர்."

"நிச்சயதார்த்தமாம் எனக்கும் அவனுக்கும். என்ன ஓடிட்டிருக்குன்னே தெரியலை அழகி."

"கஷ்டம்தான், ஒரே சமயத்தில மூணு பேரைக் கட்டிக்கிறது. அதுக்கு ஏதாவது டோக்கன் சிஸ்டம் வெக்கணும். ஏய்! ஏய் அடிக்காதே... இதுக்குப் போய் அழுவறே? வாழ்க்கைல அழ வேண்டியது ஏராளம் இருக்கு... பாரு, என்னைத் தவிர வேறு யாராவது உன்னைக் கட்டிக்க வந்தான்னா, பட்டா.... மவனே, பலி போட்டுடுவேன்."

"சும்மா பேசு!"

"சரி, ஓல்டான் ஓல்டான், இறங்கிக்க..."

அவர்கள் இறங்கிக் கொண்டனர். "மருந்தீசுவரர் கோயில் திறந்திருக்கா பார்க்கலாம்!"

"சில்லி, இது சினிமா இல்லை."

"ஒரே வழி, உங்கப்பாவை நான் சந்திக்கறதுதான். அவர்தானே மூலவர். மத்ததெல்லாம் குட்டி தேவதைகள்தானே?"

"அவசரம் வேண்டாம். இதை நான் சமாளிக்கிறேன்."

"எப்படி?"

## ரசித்தேன்!



கமல்ஹாசனின் தீவிர ரசிகை நான். நான் காலேஜ் படிச்சப்போ, ஃப்ரெண்ட்ஸோட எல்லாம் சேர்ந்து கமல் படங்களை சளைக்காமல் அலசி ஆராய்ஞ்சிருக்கேன். 'மூன்றாம் பிறை', 'நாயகன்' படங்களை எத்தனை தடவை பார்த்தாலும் எனக்கு அலுக்காது.

– சுதா ரகுநாதன்

# விசிறிக்கிறாங்க!

ஷாருக்கானின் படு பயங்கர ரசிகை நான். மணிரத்னம் படங்களை மிஸ் செய்ய மாட்டேன். 'யுவா' சூப்பர் படம். விளையாட்டில் கிரிக்கெட் பிரியம். அதிலும் ராகுல் டிராவிட்னா ஆட்டோ கிராப் கேட்கிற அளவுக்கு தீவிர ரசிகை.

- ஜெனிலியா



"சரவணனையும் விஜியையும் மோத விட்டுர்றேன்."

அழகேசன் முகம் மலர்ந்து, "கை குடு பார்ட்னர், உனக்கும் என் மூளை கொஞ் சம் ஒட்டிக்கிச்சு."

**பா**ர்க் ஒட்டலின் நூதனமான ஏட்ரியத்தை மஞ்சரி வியந்து பார்த்துக் கொண்டிருந்தாள். "வாட் வில் யூ ஹாவ்?" என்றான் விஜி. மெனுகார்டை அலட்சி யமாகப் பார்த்துக் கொண்டே, அவ்வப் போது அவளையும் பார்வையில் நிறுத்தி, இரண்டு கண்களையும் சிமிட்டினான். மஞ்சரிக்கு அவனைப் பார்க்காமல் தவிர்க்க முடியவில்லை. மிக மிக அழகாக இருந்தான். இம் மாதிரியான ஆண் பிள் ளையை விளம்பரங்களில்தான் பார்த் திருக்கிறாள். கேசம், நெற்றி, புருவம், கண் களின் அளவு, மூக்கின் கூர்மை, உதடுகளின் மென்மை, தாடை, கழுத்தின் அளவு, சட்டைக்கை இறுதியில் மணிக்கட்டின் விரல்களின் வெண்மை, இலேசான வாசனை. மனசு சஞ்சலப்பட்டது.

"என்ன பாக்கறே?"

"அமெரிக்கா உன்னை பளபளன்னு ஆக்கிடுச்சு... நீ ஏன் இன்னும் கல்யாணம் செய்துக்கலைன்னு வியப்பா இருக்கு."

"எனக்குப் பிடிச்ச பெண் இந்தியா விலன்னா இருக்கா!"

"எங்கே?"

"இங்கே."

"விஜி, ஒருமுறை ரெண்டு பேரும் சேர்ந்தாப்பல கண்ணாடில பாத்துக் கலாம். அப்புறம் சொல்லு. இதைவிட மிஸ்மாட்ச் இருக்குமான்னு."

"நான் விரும்பறது மனப்பொருத்தம்."

"என் மனத்தைப் பத்தி உனக்கு என்ன தெரியும்?"

"நீ வெளிப்படையா பேசறியே, அதுவே போதும்."

"வெளிப்படை! அப்ப நான் சொல் றதைக் கேளு. அழகேசன்னு ஒருத்தனை நான் லவ் பண்றேன். அவனைக் கல் யாணம் கட்டிக்க அண்யாகிட்ட அனு மதி கேட்க சந்தர்ப்பத்துக்குக் காத்துக் கிட்டிருக்கேன்."

விஜியின் முகபாவத்தில் எந்தவித மாறுதலோ அதிர்ச்சியோ தெரியவில்லை.

"லெட்ஸ் ஆர்டர், வெய்ட்டர்" என்று கை சொடக்கினான். (தொடரும்)

## மைக்ரோவேவ் மாமி



**ஹா**ய்! எல்லார்க்கும் இந்த மைக்ரோவேவ் மாமியோட கூல் விஷ்ஷஸ்... என்ன... வெயில் போட்டு மனுஷாளைப் படுத்தறதா... கவலைப்படாதேள். இந்த வெயிலைத் தணிச்சுக்கறதுக்காக என்னால் ஆன ஒரு ஹெல்ப்... இந்த மேங்கோ ரோஸ் ஷேக்...

நன்னா பழுத்ததாப் பார்த்து நாலு மாம்பழம்... மல்கோவா மாம்பழமாத்தான் இருக்கணும்னு அவசியமில்ல. ஜூஸ் எடுத்தா நாலு கப் வரணும்... அதுக்கேத்த மாதிரி பார்த்து வாங்கிக்கோங்கோ. அப்புறம் நாலு லெமனை ஜூஸ் பண்ணி எடுத்துக்கோங்கோ. கடையில போய் லிம்கா வாங்கிண்டு வந்து, ஃப்ரீஸர்ல வச்சிடுங்கோ. எப்போ வெளில எடுக்கணும்னு அப்பறமா சொல்றேன். முக்கியமா ரோஸ் ஸிரப்... இது இப்போ மார்கெட்லயே ஈஸியா கிடைக்கறது. அதை ஒரு கப் எடுத்துக்கோங்கோ.

இப்போ ஒரு பாத்திரத்துல கொஞ்சம் ஐஸ் க்யூப்ஸை பொடி பண்ணி எடுத்துண்டு, அதன் மேல ரோஸ் ஸிரப்பை கொஞ்சமா மிக்ஸ் பண்ணுங்கோ. நன்னா கலக்கிட்டு, அதன் மேல நாம ஏற்கெனவே ரெடி பண்ணியிருந்தோமோனா, அந்த நாலு கப் மேங்கோ ஜூஸை மெதுவா மிக்ஸ் பண்ணிண்டே வரணும். இப்போ அதை நாலு கிளாஸ்ல ஊத்தி, ஃப்ரீஸர்ல வச்சிருக்கற லிம்காவை எடுத்து மிக்ஸ் பண்ணினா, மேங்கோ ரோஸ் ஷேக் பக்காவா ரெடி... இப்போ ஒவ்வொரு கிளாஸ்லயும் ரெண்டு ரெண்டு ரோஜா இதழ்களைத் தூவினா, கண்ணுக்குக் குளிர்ச்சியா இருக்கும். தொண்டையிலே ஜில்லுன்னு இறங்கும்!



# மேங்கோ ரோஸ் ஷேக்!

**அ**ப்புறம் இன்னொரு விஷயம்... அமெரிக்காலே நடக்கப் போற ஒரு சமையல் போட்டிக்கு, என்னைக் கூப்பிட்டிருக்கா. கிளம்பிண்டேயிருக்கேன். அதனால அடுத்த வாரத்துலேயிருந்து கொஞ்ச நா உங்களை மிஸ் பண்ணப் போறேன். லெட்டரெல்லாம் 'கல்கி'க்கே அனுப்புங்க... வந்து பாத்துக்கறேன். ஹேவ் எ கூல் சம்மர், பை...பை! ○

# மனசு

கு. அருணாசலம்



அணைக்கரைப் பிள்ளையார் கோயில் முன்புற ஆட்டோ ஸ்டாண்டு. கையில் ஒலைப்பெட்டி பார்சலுடன் ஓர் ஆள் வந்தார்.

"வாங்க அண்ணாச்சி! எங்கே போகணும்?" ஆட்டோ கண்ணன் ஆர்வமாக விசாரித்தான்.

"ஆயிரப்பேரி வரை போகணும்"

"ஏறுங்க அண்ணாச்சி...போவோம்!"

"எவ்ளோ தம்பி வேணும்?"

"நீங்க கொடுக்கிறதைக் கொடுங்க. வாங்கிக்கிறேன்!" ஆட்டோவில் ஏறி உட்கார்ந்தார் மாணிக்கம்.

'பார்ட்டி வசமான பார்ட்டியா தெரியுது. போய் இறங்கினதும் கறந்துட வேண்டியதுதான்' ஆட்டோவை ஓட்டிச் சென்றான்.

போகும் வழியில் ஆலமரம் ஒன்றின் கீழ் இளநீர்க் கடையைப் பார்த்தார் மாணிக்கம்.

"தம்பி! ஆட்டோவை நிறுத்துப்பா!"

ஆட்டோ நின்றதும் இளநீர் வியாபாரியிடம் போய், ஐந்து இளநீர்களை வாங்கி ஆட்டோவில் வைத்தார். மேலும் இரண்டு இளநீரை சீவச் சொல்லி, கண்ணனிடம் அன்புடன் நீட்டினார்.

"இருக்கட்டும் சார்." அவன் மறுத்தாலும் அவர் விடுவதாயில்லை.

"அட! குடியப்பா!"

இரண்டு கிலோமீட்டர் தாண்டியதும் ஆயிரப்பேரி கிராம வாசலில் இறங்கிக் கொண்டார் மாணிக்கம்.

"இந்தாப்பா, இந்த இளநீர்லே இரண்டை நீ வைச்சுக்க! உன் வீட்டுக்குக் கொண்டு போய், உன் புள்ள குட்டிகளுக்குக் கொடு. அது சரி, ஆட்டோ சார்ஜ் எவ்வளவு வேணும்?" மாணிக்கம் கேட்டார்.

"வழக்கமாக இருபது ரூபா வாங்குவேன். நீங்க பதினஞ்சு ரூபா கொடுங்க" என்றது கண்ணனின் வாய். பதினைந்து ரூபாய் கொடுத்து விட்டு புன்னகையுடன் நடந்தார், மனங்களைப் படிக்கத் தெரிந்த மாணிக்கம். ○

# அருள்வாக்கு

மழை ஒன்றுதான் - ஆனால் அதிலிருந்தே எத்தனை விளைவுகள் உண்டாகின்றன? பூமி முழுதும் ஈரம் உண்டாகிறது; ஈசல் உண்டாகிறது; தவளை கத்துகிறது; சில செடிகள் பச்சென்று தழைக்கின்றன; வேறு சில அழுகுகின்றன. இத்தனையும் ஒரே மழைக்கு அடையாளங்கள். அதே மாதிரி மாந்திரீகமாகவும், ஜ்யோதிஷ ரீதியிலும், வைத்திய சாஸ்திரப்படியும் நாம் குணம் பெற வேண்டிய வியாதிக்கும் ஒரு கர்மாவே காரணம். இன்னும் வாழ்க்கையில் வியாதியைத் தவிர பலவிதமான பிரச்னைகள்! பணத்தால், உத்தியோகத்தால், தேக பலத்தால், அறிவு சக்தியால் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் (Problems) எல்லையில்லாமல் இருக்கின்றன. இந்தப் பிரச்னைகள், கஷ்டங்கள் எல்லாவற்றுக்கும் காரணம் கர்மம்தான். ஸயன்ஸ்படி விளைவு (Effect) இருந்தால் காரணம் (Cause) இருந்தேயாக வேண்டும்.

ஜகத் முழுதும் காரணம் - விளைவு, செயல் - பிரதிச்செயல் (Action and Reaction) என்ற துவந்தத்துக்குள்தான் கட்டுண்டிருக்கிறது. பௌதிக சாஸ்திரம் (Physics) முழுவதும் இந்த உண்மையைத்தான் விளக்குகிறது. ஜடப்பிரபஞ்சம், ஜீவப்பிரபஞ்சம் இரண்டும் ஒரே மூலத்திலிருந்தே வந்ததால், ஜகத்துக்கு உள்ள விதி மனித வாழ்விலும் உண்டு. நம் செயலுக்கெல்லாம் நிச்சயமாகப் பிரதி உண்டு.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# 22 திரையுலக நினைவுகள்
## அந்த நாள் ஞாபகம்

சிம்லாவில் நான் படுத்திருந்த காரின் கதவை யாரோ தட்டுவது போலிருந்தது. திடுக்கிட்டு எழுந்து திறந்து பார்த்தால்... எம்.ஜி.ஆர். நின்றிருந்தார்!



கையில் சூடான பால்கோப்பையை ஒரு மஃப்ளரால் சுற்றி வைத்துக் கொண்டிருந்தார். எனக்கு 'திக்'கென்றது. 'என்ன இது, எம்.ஜி.ஆரே நமக்குப் பால் கொண்டு வந்திருக்கிறாரே' என்று சங்கடமாகி விட்டது.

"இந்தாங்க சரவணன், சூடா பால் குடிங்க. தொண்டை வலிக்கு இதமாக இருக்கும்" என்றார்.

பதற்றத்துடன் "என்ன ஸார், நீங்களே கொண்டு வந்திருக்கீங்க" என்றேன். "என் உதவியாளர் மலையப்பனிடமோ, வேறு யாரிடமாவதோ அல்லது எஸ்.பி.முத்துராமன், திரிலோக்சந்தர் போன்றவர்களிடமோ கொடுத்தனுப்பியிருக்கலாமே ஸார்."

"அவங்ககிட்ட கொடுத்தனுப்பியிருந்தா, நீங்க குடிச்சிருக்க மாட்டீங்க. ஏதாவது சாக்கு சொல்லி வேண்டாம்னு சொல்லியிருப்பீங்க. இந்தப் பாலை நீங்க இப்ப குடிக்கிறீங்க. காலி கப்பை எடுத்துக் கொண்டுதான் நான் போவேன்" என்று அடம் பிடித்தார்.

அதேபோலவே செய்தார்.

என்மேல் அவர் கொண்டிருந்த தனிப்பட்ட பாசத்தை உணர்ந்து, நான் நெகிழ்ந்து போய் விட்டேன்.

நாங்கள் குளிரால் அப்படி அவதிப்பட்டுக் கொண்டிருந்தோம். அதென்னவோ அவரை எந்தக் குளிரும் ஒன்றும் செய்ததில்லை.

படப்பிடிப்புக்காகத் தங்கியிருந்த போதும்கூட, விடியற்காலையில் எழுந்து உடற்பயிற்சியெல்லாம்

# சைவப்படத்தில் அசைவமா?

செய்து முடித்து விட்டு வந்து, எங்கள் அறையைத் தட்டுவார்.

''என்ன முதலாளி... இன்னுமா எழுந்திருக்கலை, ம்... எழுந்திருங்க''

கதவைத் திறந்து பார்த்தால், சட்டை போடாமல் வெறும் உடம்புடன் நின்று கொண்டு சிரிப்பார்.

''தீவிர உடற்பயிற்சி செய்யும் போது வியர்வை வெளியேறுவதால் குளிர் தாங்கும்'' என்று விளக்கம் தருவார்.




இப்படி தினமும் ஏதோ நெருங்கிய நண்பர் போல அனைவருடனும் அரட்டையும், கிண்டலும் கேலியுமாக ஏதேனும் சொல்லிக் கொண்டிருப்பார்.

படப்பிடிப்பு இல்லாத சமயங்களில் பொழுது போக்குக்காக சீட்டாடுவார். தோற்றுப் போகிறவர்கள் தலையணையைத் தலையில் தூக்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்று கண்டிஷன் போடுவார். காசு வைத்து ஆட மாட்டார்.

• 'அன்பே வா' படத்தில்



'அன்பே வா' படத்துக்காக அவர் எங்களுக்குத் தந்திருந்த 72 நாள் கால்ஷீட்டில், ஒரு நாள் கூட அவரால் எங்களுக்கு ஒரு சிறிய பிரச்னைகூட ஏற்பட்டதில்லை.

படம் நன்றாக வர வேண்டும் என்பதற்காக, பல்வேறு யோசனை களைக் கூறுவார். ஆனால் அந்த யோசனையில் பிடிவாதம் காட்டமாட்டார்.

படத்தில் கதாநாயகியின் அப்பா வேடத்துக்கு, டணால் கே.ஏ. தங்கவேலுவைப் போடலாமே என்று யோசனை சொன்னார்.

''டி.ஆர். ராமச்சந்திரனைத்தான் என் தந்தை போட விரும்புவார். ஏனெனில் அவர் ரொம்பக் கால நண்பர். இருந்தாலும் தங்கவேலுவைப் போடலாம் என்ற உங்கள்

**ஏவி.எம்.சரவணன்**

யோசனையையும் நான் அவரிடம் சொல்கிறேன்" என்றபோது, அவசர அவசரமாக "வேண்டாம்... வேண்டாம் சரவணன். அப்பாவுக்கு என்ன விருப்பமோ அப்படியே செய்யட்டும். நான் ஒரு ஐடியா தான் சொன்னேன். யாரைப் போட்டாலும் எனக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. ப்ளீஸ். நான் யோசனை சொன்னதாகக் கூட அவரிடம் நீங்கள் சொல்ல வேண்டாம்'' என்றார் எம்.ஜி.ஆர்.

அவரது இந்தப் பண்பு எனக்கு மிகவும் பிடித்திருந்தது.

ஏவி.எம். பேனரில் அவர் இந்தப் படத்தில் நடித்ததில், அவருக்கும் பெருமகிழ்ச்சி என்பது புரிந்தது. எங்கள் நிறுவனத்தின் மீது அவர் கொண்டிருந்த மரியாதை ஒரு சம்பவத்தில் வெளிப்பட்டது.

எனக்கு சாண்டோ சின்னப்பா தேவரை மிகவும் பிடிக்கும். ஏவி.எம்.மில் அவரது படத்தின் ஷூட்டிங் எப்போது நடைபெற்றாலும், தவறாமல் என் அறைக்கு வந்து பேசிக் கொண்டிருந்து விட்டுப் போவார். அதே போல, அவர் படம் ஷூட்டிங் வேறு இடங்களில் நடைபெறும்போது, குறிப்பாக எம்.ஜி.ஆர். நடிக்கிறார் என்றால் நான் அந்த செட்டுக்குப் போவேன். படப்பிடிப்பு இடைவேளையில் எம்.ஜி.ஆருடன் அரட்டை அடித்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்புவேன்.

இது எனக்கு ரொம்ப நாளாகப் பழக்கம். எங்களுக்காக 'அன்பே வா' படத்துக்கு ஒப்புக் கொண்ட பிறகு, நான் ஒரு நாள் அவரை தேவர் பட ஷூட்டிங்கில் சந்தித்தபோது சொன்னார்.

"ஒரு வேண்டுகோள் சரவணன். இனிமேல் நான் செட்டில் இருக்கும்போது நீங்கள் என்னை வந்து பார்க்க வேண்டாம். நமது நட்பு பற்றியோ, நான் உங்கள் படத்துக்கு ஒழுங்காக கால்ஷீட் தேதிகள் கொடுத்திருப்பது பற்றியோ, யாரும் சரியாகப் புரிந்து கொள்ள மாட்டார்கள். நீங்கள் அடிக்கடி செட்டுக்கு வந்து என்னைப் பார்த்தால் "பார்... பார்... எம்.ஜி.ஆர். ஏவி.எம்.முக்கே சரியா தேதி தரல போலிருக்கு. சரவணனை இப்படி அலைய விடறாரே...'' என்று பேசக் கூடும். அதுக்கு நாம் ஏன் சான்ஸ் தரணும்? உங்களுக்கு என்னைப் பார்த்துப் பேசணும்னு இருந்தா, தோட்டத்துக்கு வாங்க. அரட்டை அடிப்போம். எப்ப வேணா வாங்க. இல்ல, போன் பண்ணுங்க, நான் உங்க இடத்துக்கு வர்றேன்...''

நான் அப்படியே அசந்து போய் நின்றேன். அப்படி ஒரு கோணம் எனக்குத் தோன்றவே



நான் இளையராஜாவின் தீவிர விசிறி. அவருடைய இசையில் ஒரு ஃப்ரெஷ்னெஸ் இருக்கும். விளையாட்டில் கிரிக்கெட் கடவுள் சச்சினைப் பிடிக்கும். சச்சின் போஸ்டருக்காக வீட்டிலே அக்காக்களுடன் வெட்டு, குத்து சண்டையே நடந்திருக்கிறது.

- தனுஷ்

இல்லை. அவருக்குத் தோன்றியது.



நாங்கள் எடுத்த முதல் வண்ணப் படம் 'அன்பே வா!' கிளைமாக்ஸ் காட்சியில் ஒரு யோசனை சொன்னார் எம்.ஜி.ஆர்.

''நானும் அசோகனும் ரொம்ப விகரஸா ஃபைட் பண்ற மாதிரி ஸீன் வையுங்க. இதுவரை சண்டைக் காட்சிகளில் என் முகத்தில் ரத்தம் வந்து வழியற மாதிரி ஷாட் வைச்சா நான் அனுமதிக்கிறதில்ல. இந்தப் படத்துக்காக நான் அதுக்கும் தயாரா இருக்கேன். ஆனா சண்டை ரொம்ப விகரஸா இருக்கணும்'' என்றார்.

கிளைமாக்ஸ் காட்சி என்பதால், எல்லோரும் என் தந்தையுடன் இது பற்றி ஆலோசித்தோம். எம்.ஜி.ஆரின் யோசனையை முழுவதுமாகக் கேட்ட அவர் ''உன் ஒபீனியன் என்னப்பா?'' என்று டைரக்டர் திருலோக்சந்தரிடம் கேட்டார்.

''நீங்க சொன்னா அப்படியே எடுத்துக் கொடுத்திடறேன். எனக்கொண்ணும் ஆட்சேபணையில்லை'' என்றார் திரிலோக்.

''ஆட்சேபணை இருக்கா இல்லையாங்கறது இல்ல இப்ப என் கேள்வி. இந்த ஃபைட்டிங் ஸீன் பத்தி உன்னோட கருத்து என்ன? அதைச் சொல்.''

''இந்தக் கிளைமாக்ஸ், படத்துக்குச் சரிப்பட்டு வராது என்பதுதான் என் கருத்து. இந்தப் படம் முழுக்க முழுக்க சைவப்படம். அதில் போய் அசைவம் போல, ஒரு விகரஸ் ஃபைட் வச்சா அது சரியா இருக்காது. இந்தப் படத்தின் தன்மைக்கு க்ளைமாக்ஸ் ஒரு மலர் போல மென்மையா இருக்கணும். இதுதான் என் கருத்து.''

இதை எம்.ஜி.ஆர். கேட்டதும், ''ரொம்பச் சரி. ஃபைட் ஸீன் சரியா வராதுதான்'' என்று உடனே ஒப்புக் கொண்டார்.

'அன்பே வா' பாட்டுப் புத்தகத்தை அப்போது எல்.பி. இசைத் தட்டு வடிவத்தில் வெளியிட்டோம். அது மிகுந்த வரவேற்பைப் பெற்றது. ஒரு கட்டத்தில் பிளாக்கில்கூட அந்தப் புத்தகம் விற்பனையானது.

படம் 23 வாரங்கள் ஓடியபிறகுதான், நாங்கள் நூறாவது நாள் விழாவையே கொண்டாடினோம்.

அதில் பேசிய எம்.ஜி.ஆர். ''இந்தப் படத்தின் வெற்றிக்கு முழுக்க முழுக்க டைரக்டர்தான் காரணம். என்னைப் பொறுத்தவரை 'அன்பே வா' என் படங்களிலேயே ஒரு ஒரு டிஃபரண்ட் பிக்சர். எப்போ இந்தப் படத்தைப் பார்த்தாலும் இந்த டிஃபரன்ஸ் தெரியும்'' என்றார்.

அது உண்மைதான். இத்தனை வருடங்கள் கழித்து 'அன்பே வா' படத்தை இப்போது பார்த்தாலும், எம்.ஜி.ஆர். படங்களிலேயே அது வித்தியாசமாக இருப்பதை உணரலாம். படத்தின் நீளம் பற்றி ஆனந்தவிகடன் பத்திரிகையில், விமரிசனத்தில் குறிப்பிட்டபோது, 'மயிலின் தோகை நீளம்தான். அதற்காக அதை வெட்டி விட முடியுமா?' என்று மிகவும் நயமாக எழுதினார் சாவி.

(தொடரும்)



இதனால குட்டீஸ்”க்கு உங்க மேல இருக்கிற கிரேஸ் போயிடாதா...?

வாஸ்தவம்தான்... ஆனா இப்போ பரீட்சைங்கிறதால குட்டீஸ்களை 'மெகா' பக்கம் விடுறதில்ல. அப்படியே சில பேர் பார்த்து பயந்தாலும், சனிக்கிழமை பட்டாபி அடிக்கிற லூட்டியில எல்லாத்தையும் மறந்துட்டு சிரிச்சிடுவாங்க! அதனால கிரேஸ் போயிடாது.

ஆண்டவர் லிங்கத்துக்கு வந்த பாராட்டு...?

மூணு பேர் ரொம்பவே பாராட்டினாங்க... ஒரு மாமி நேரா என்னண்ட வந்து, “ஏண்டா பட்டாபி... நூறு ரூபா வாங்கிண்டு அப்பாவியாத்தானே இருந்தே... எதுக்குடா நோக்கு இந்த வேண்டாத வேலை?”ன்னு அன்பொழுகப் பாராட்டினாங்க. அடுத்து என் தர்ம பத்தினி.... 'சனியனே'....னு' சிலாகிச்சு சொன்னாங்க. இதெல்லாம் போறாதுன்னு என் பொண்ணு ஐஸ்வர்யா “ஐ டோண்ட் லைக் யூ அப்பா”னு என்று

# கலா கலக்கறாங்க!

ரொம்பத் தெளிவா சொல்லிட்டா.

பாஸ்கர் 'வசம்' 'அமுதே', 'இளமை

## “காரமாதானே இருக்கு!”

**'சின்னப் பாப்பா - பெரிய பாப்பா'வில் 'பட்டாபி'யாக வந்து கிச்சுக்கிச்சு மூட்டுபவர், திடீரென 'செல்வி'யில் ஆண்டவர் லிங்கமாக வந்து கூலாக மிரட்டிக் கொண்டிருக்கிறார்.**

**ஆமா... எதுக்கு இந்த திடீர் கூல் வில்லன் அவதாரம்...?**

ஸ்வீட் மட்டுமே சாப்பிடப் படாது... அப்புறம் திகட்டிடும் இல்லையா...? அதனால தான் இந்த வில்லன் கேரக்டர் பண்றேன். ஆனா இதுவும் ரசிக்கக்கூடிய, அருமையான காரமாகத்தானே போயிட்டிருக்கு.





இதோ இதோ' உள்ளிட்ட அரை டஜன் படங்கள் கைவசம் இருப்பதால், வேறு எந்த சீரியலுக்கும் ஒப்புக் கொள்ள வில்லையாம்.

## "ஓவரா வழிஞ்சா..."

**இவருக்கெல்லாம் அறிமுகம் தேவையா என்ன ... சரி... நம் கடமையை கரெக்டா செய்துடுவோம்... 'மெட்டி ஒலி'யில் மனைவி விஜி என்ன பாடுபடுத்தினாலும், கூலாகவே சமாளிக்கும் கோபி என்கிற திருமுருகன்.**

**கூல் கணவனா சீரியல்ல நடிக்கறீங்க... ஆனா நிஜத்துல...?**

ஹலோ... என்ன நிஜத்துலன்னு இழுக்குறீங்க... நிஜ வாழ்க்கையிலயும் நான் கூல் ஹஸ்பெண்ட்தான்... வேணும்னா நான் இருக்கறப்பவே என் மனைவிகிட்ட கேட்டுக்கோங்க.

**கூல் கணவர் ரோலுக்கு உங்களுடைய ரோல் மாடல்...?**

எங்க அப்பாவேதான்... அவர் அம்மாகிட்ட எவ்ளோ அன்பா, ஆதரவா, அனுசரணையா நடந்துகிட்டாரோ, அதைத்தான் 'மெட்டி ஒலி' கோபி செய்யறான்.... அதைத்தான் நானும் ஃபாலோ பண்றேன்.

ஆனா ஓவரா வழிஞ்சா பொண்டாட்டிதாசன்னு கிண்டலடிப்பாங்க. அதனாலே ஊரைப் பத்திக் கவலைப் படக் கூடாது... வாழறது நமக்காகன்னு நினைச்சிக்கணும்.

**அடுத்த புராஜெக்ட்...?**

அடுத்ததும் சின்னத்திரைலதான் செய்யப் போறேன்... அதற்கப்புறம் சினிமா!



## "வித்தியாசமே இல்லை"

**'கோலங்கள்' டீவி தொடரில் அபியின் கூல் ஃபிரெண்டாக வருபவர் உஷா. அதாங்க நம்ம தீபா வெங்கட்.**

**அபிக்கு மட்டும்தான் கூல் ஃபிரெண்ட்.... மத்தவங்களுக்கு செம ஹாட் ஃபிரெண்டாமே நீங்க...?**

ஆக்கவலி... (ஆஹா... ஆரம்பிச்சுட்டாங்கப்பா...!) நான் ரொம்ப சாஃப்ட்டான பொண்ணு. 'கோலங்கள்' உஷாவுக்கும், தீபா வெங்கட்டுக்கும் வித்தியாசமே கிடையாது. என்ன... சீரியல்ல எல்லாமே பாஸிடிவ்வா காட்டுவாங்க.... நிஜத்தில நிறைய நெகட்டிவ்ஸூம் இருக்கும்.

**உங்கள் நட்பு வளையம்...?**

ரொம்ப ரொம்பச் சின்னது. என் ஃபிரெண்ட்ஸுக்கு பிரச்னை வந்தா, உடனே உதவ ஓடுவேன். எனக்கு ஏதாவது சிக்கல்னா அவங்க வரணும்னு அதிகம்

எதிர்பார்க்கறதில்ல.

**தோழி கேரக்டரைத் தவிர வேறு என்ன கதாபாத்திரம் பண்ணத் தெரியும்?**

'கீதாஞ்சலியில நெகட்டிவ் ரோல் பண்றேன்... காமெடி கேரக்டர் பண்ண முடியும். தீபாவால எந்த வேடத்தையும் பண்ண முடியும்.... நம்புங்க ப்ளீஸ்!'

## "அந்தப்பழம் புளிக்கும்"

ஆர்த்தி... சன் டீவி 'சூப்பர் டென்' நிகழ்ச்சியின் அசைக்க முடியாத தூண் (!) எந்தக் கேரக்டராக இருந்தாலும் கொஞ்சம்கூட அலட்டிக் கொள்ளாமல் கூலாக நடிக்கும் (அடிக்கும்) அவரைச் சந்தித்தோம்:

**அது எப்படிங்க கூச்சமே இல்லாம, கூலா எல்லா ஹீரோயின்ஸையும் இமிடேட் பண்றீங்க?**

மூணு வயசுல இருந்து நடிக்கறேன்... இதுவரைக்கும் அறுபத்து மூணு படம் நடிச்சிருக்கேன். ஸோ... என்னோட தொழில் சினிமா... அப்படி இருக்க எதுக்குக் கூச்சப்படணும்...? என்ன... கொஞ்சம் (!) குண்டா இருக்கேன்... அதைத் தவிர மத்த எந்த விஷயத்துக்கும் கூச்சப்பட அவசியமே இல்லே.

**'குண்டு ஆர்த்தி'னு கூப்பிட்டா ரொம்ப கோபம் வந்துடுமாமே...?**

வரவே வராது... இப்போ நீங்ககூடத் தான் கேள்வியோட கேள்வியா 'குண்டு ஆர்த்தி'னு சொன்னீங்க... நான் கோபப் பட்டேனா என்ன...?

**கோபம் வர்றப்போ உங்களை எப்படி கூல் பண்ணிக்குவீங்க?**

சத்தியமா அமைதியாவெல்லாம் ஒதுங்கிட மாட்டேன்... சத்தம் போட்டு எல்லாரையும் வெறுப்பேத்திட்டு, நான் கூலாயிடுவேன்.

**ஹீரோயின் சான்ஸ் கிடைக்காததால வெறுப்பாகி நீங்க இப்படி எல்லா ஹீரோயின்ஸையும் கலாய்க்கிறதா கிசுகிசுக்கறாங்களே!**

அய்யய்யே! இதுக்கெல்லாம் பேரு கிசுகிசுவா? வெறும் பிசுபசு! சூப்பர்டென்ல நான்தான் ஹீரோயின். அதுவும் வாரா வாரம் ஒரு படம், ஒரு ஹீரோயின் கேரக்டர்னு பண்ணிட்டு இருக்கேன். எதுக்கு ஹீரோயின் சான்ஸ்? சீ...! அந்தப் பழம் புளிக்கும்!

ஆர்த்தியின் கைவசம் 'சின்னா', 'தாஸ்', 'என் காதலே....' உள்ளிட்ட பத்துப் படங்கள் உள்ளன.

- இரா. முத்துக்குமார்
படம்: ராஜன்

## விசிறிகள்!



**நா**தஸ்வரம் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணனின் விசிறி நான். அவரது இசையைக் கேட்டால், தேவலோகத்தில் சஞ்சரிப்பதுபோல அத்தனை சுகமாக இருக்கும். சினிமாவில் எம்ஜிஆரின் விசிறி. 'நாடோடி மன்னன்' படத்தை பத்து தடவையாவது பார்த்திருப்பேன்.

— குன்னக்குடி வைத்தியநாதன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

# தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 16 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா நல்லாசியுடன் A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,



# ஜில்லுன்னு ஜோரா!

"நமக்கு வரும் பற்பல நோய்களுக்கு, உடல் சூடுதான் மூல காரணமாக அமைகிறது. 'வெக்கையைக் குறைச்சாலே, ஆரோக்கியமும் இளமையும் கியாரண்டி" என்கிறார் டாக்டர் எஸ்.கண்ணன். சாய்ராம் சித்த மருத்துவக் கல்லூரியின் விரிவுரையாளரான இவர், ஹெல்த் அண்ட் பியூட்டி க்ளினிக் நடத்தி வருகிறார். இவர் தரும் பயனுள்ள கூல் கூல் டிப்ஸ் இதோ!

★ வெயில் ஆரம்பித்துவிட்டது. நிறைய எலுமிச்சம் பழங்களை வாங்கிப் போடுங்கள். தினமும் ஒரு தம்ளர் எலுமிச்சை சாற்றை உப்போ, பனை வெல்லமோ, தேனோ கலந்து அருந்துங்கள்.

★ மோர், இளநீர், பதநீர், ஏலம், சுக்கு, வெல்லம் கலந்த பானகம் போன்றவற்றையும் அடிக்கடி அருந்தலாம். சின்ன வெங்காயம் சேர்த்த பழையது சாப்பிடலாம்.

★ பாட்டிலில் அடைத்த குளிர் பானங்களில் ஆஸிட் அதிகம். அவை சூட்டை அதிகமாக்கி, நாவறட்சி ஏற்படுத்தும் என்பதால் தவிர்ப்பது நல்லது. குளிர வைத்த சுத்தமான நீரே தாகத்துக்கு ஏற்றது.

★ தர்பூசணி, கிரணி, நுங்கு, வெள்ளரியை அதிகமாகச் சாப்பிடுங்கள்

★ காய்கறிகளில் புடலை, பீர்க்கு,



★ டாக்டர் எஸ்.கண்ணன்



கரை, அவரை, முள்ளங்கி, பூசணி, பரங்கியும், கீரைகளில் முளைக்கீரை, மணத்தக்காளி, வெங்காயத்தாள், வெந்தயக்கீரையும் சூடு தணிப்பவை.

★ கற்றாழைப் பிசினை பூசிக் குளித்தால் சருமம் உலராமல் இருக்கும்.

★ நன்னாரி மணப்பாகு, ஜம்பீராதி பானகம், மாதுளை மணப்பாகு, வெண்பூசணி லேகியம் போன்றவை சித்த மருத்துவக் கடைகளில் கிடைக்கின்றன. இவற்றில், ஏதேனும் ஒன்றிரண்டை, இரண்டு வேளையும் சாப்பாட்டுக்குப் பின்பு, ஒரு ஸ்பூன், சாப்பிட்டாலே போதும் உடல் குளுகுளு என்று இருக்கும்.





★ தண்ணீர்விட்டான் கிழங்கு லேகியம், திரிபலா மாத்திரை, சிவப்பு குக்கில் தைலம் போன்றவையும் சூடு தணிக்கும் சூப்பர் தயாரிப்புகள். மருத்துவரின் பரிந்துரையின் படி உட்கொண்டால், உடல் வெம்மை குறையும். வேனல், வேர்க்குரு கட்டிகள், கண் நோய்கள், தலைவலி வராது. சருமம் பளபளப்பு அடையும்.

• நெல்லி, பொன்னாங்கண்ணி, வல்லாரை, கரிசாலை போன்றவற்றால் தயாராகும் தைலங்களும் சிறந்த பயன்தரக் கூடியவை. வாரமிருமுறை தேய்த்துக் குளித்தால் தலைமுடி செழித்து வளரும். மேனி பொன்னிறம் பெறும். கண்பார்வை, ஞாபக சக்தி வலுப்பெறும்.

• கடைகளில் விற்கும் ஹென்னாவைத் தவிர்த்து, மருதாணித் தழையைப் பயன்படுத்தினால், உடல் குளிர்ச்சி அடையும். பெண்கள் மல்லிகைப்பூ சூடலாம். அது குளிர்ச்சியும் மனமலர்ச்சியும் தரும்.

★ வெயிலில் அலைய நேர்ந்தால், இரவு உச்சந்தலையிலும், உள்ளங்காலிலும் இரண்டு சொட்டு விளக்கெண்ணெய் தடவிக் கொண்டு படுக்கவும்.

★ இரு வேளையும் குளித்து, பருத்தி ஆடைகளை அணிந்து, காரம், புளி குறைத்து, நிறையத் தண்ணீர் அருந்தினாலே ஓரளவுக்கு கோடையைச் சமாளித்து விடலாம்.





- சரண்

# வலைபாயுதே



"ஆண்களை விட பெண்கள் அதிகம் கனவு காண்கிறார்களாம். வயதானவர்களை விட, குழந்தைகள் அதிகம் கனவு காண்கிறார்களாம். ஆனால் கனவுகளின் நிறம் கறுப்பு - வெள்ளை!" - இப்படி பல சுவாரசியமான விஷயங்களுடன் நம்மை அழைக்கும் தளம் coolquiz.com. அறிவியல் to சினிமா குவிஸ்கள், விளையாட்டுகள், புதிர்கள் என படபடக்கும் குழந்தைகளுக்கான தளம் இது. "ஆண் சிங்கங்கள் ரிஸ்க் எடுக்கவே எடுக்காதாம். பெண் சிங்கங்கள்தான் அதிகம் வேட்டையாடுமாம்" "எலெக்ட்ரிக் நாற்காலியைக் கண்டுபிடித்தவர் ஒரு பல் மருத்துவராம்!" - இப்படிக் குட்டி விஷயங்கள், குட்டீஸ்களுக்காக கொட்டிக் கிடக்கின்றன. (ஹலோ பெரியவாஸ், நமக்கு மட்டும் எல்லாம் தெரியுமா? நாமளும் போய்ப் பார்க்கலாம். தப்பில்ல!)



## அம்புட்டும் ஏ/சி

இந்தியாவின் சொர்க்கம். ஆனால் நரக வேதனைப் பட்டுக் கொண்டிருக்கும் சொர்க்கம்.... எது? ஜம்மு - காஷ்மீர்தான். இயற்கை எழுதிய இந்த அழகான கவிதையை, ஒரு முறையாவது சென்று ரசிக்க எல்லாருக்கும் விருப்பம் இருக்கும். ஜம்மு - காஷ்மீர், லடாக் இவற்றின் சுற்றுலா விவரங்களை பற்றித் தெரிந்து கொள்ள jktourism.orgக்குப் போங்க. கோடை, குளிர், இலையுதிர் காலங்கள் என மூன்று நிறங்களில் பருவத்திற்கேற்ப குளிர்ச்சியாக வடிவமைக்கப்பட்டுள்ள தளம் இது. ஏ.சி பஸ், ஏ.சி தியேட்டர் போல், ஏ.சி பொருத்திய தளம் எனலாம். சுற்றுலாத்தளங்களை மேப் போட்டுக் காண்பிக்கிறார்கள். (இப்போதைக்குக் குறைந்தபட்சம் இந்த வெப் - பக்கங்களையாவது ரசிக்கலாமே!)

கோdie - வந்தாச்சு! வீட்டுல ஃப்ரிட்ஜுக்குள்ள போய் உட்காந்துக்கலாமான்னு தோணுது. ஓ.கே. ஃப்ரிட்ஜுக்குள்ள உட்கார வைக்கிற ஜட்டமான ஐஸ்க்ரீமை எப்படி விதவிதமா, வகை வகையா, கலர் கலரா தயாரிக்கலாம்னு கூலா சொல்ற சைட் ice-cream-recipes.com. ஐஸ்க்ரீமின் பூர்விகம் முதற்கொண்டு புதுசா வந்திருக்கிற வெரைட்டி வரை தகவல்கள் உறைந்து கிடக்கின்றன. ஐஸ்கிரீம் செய்ய, அதனை அலங்காரம் செய்ய, என தனித்தனியாக டிப்ஸ் கிடைக்கின்றன. (என்னதான் இருந்தாலும், நம்மூர் குச்சி ஐஸ், பால் ஐஸ் பத்தி கொஞ்சம் சொல்லி இருக்கலாம்)

- ப்ரெளஸர்





**த**ண்ணீர்ப் பஞ்சமும், சூரிய இம்சையும் குத்து டான்ஸ் ஆடிக் கொண்டிருக்கும் சென்னை வறுநகரில், வெயிலுக்கு ஏற்ற அழகிய ஸ்பா நிலையங்களும், அவை பற்றிய அடேயப்பா விளம்பரங்களும் கண்களைக் கவருகின்றன.

"ஏய்... யாரங்கே? உடனே இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தனுப்பு. ஜம்முன்னு ஸ்பா பாத் எடுக்கணும்" என்று சட்டென்று சொல்லும்படி ஆசையைக் கிளறிவிட்டது சென்னை, கிண்டியில் உள்ள




லீ மெரீடியன் ஹோட்டலின் வெட்டிவேர் குடிலையும், பளிங்கு பாத்டப்பையும் பார்த்தபோது...

**வா**சனைப் பூக்கள் மிதந்த பாத்டப்பில், ஓர் அழகுப் பூவும் மெய்மறந்து மிதந்துகொண்டிருக்க, அவருடைய கால்களுக்கு, செல்ல சொடுக்குப் போட்டு மசாஜ் செய்து கொண்டிருந்தனர்.

இன்னொருவர், ஸ்டீம் பாத் எடுத்துவிட்டு, ஆயாக் கடை இட்லி போல ஆவி பறக்க ஒளி வட்டத்துடன், வெள்ளை வெளேரென வெளியே வந்தார்.

மரப்பலகை மீது சர்வமும் துறந்து படுத்திருந்தவர் மீது எண்ணெயைக் கொட்டி, இருவர், அமுக்கி, தட்டி, பிடித்து, மசாஜ் செய்து கொண்டிருக்க, அந்த எண்ணெய்க் கத்திரிக்காய் இளைஞர் நல்ல கொர்... கொர்...!

"எங்களிடம் தாய், ஸ்வீடிஷ், ஆயுர்வேதா என விதவிதமான ஸ்பாக்கள் உள்ளன. ஆனால் நிறையப் பேரின் விருப்பம், ஆயுர்வேத மசாஜ் தான். கஸ்டமர்களின் நாடி பிடித்துப் பார்த்து, அதற்கேற்ப 'அப்யங்கம்' எனப்படும் ஃபுல் பாடி மசாஜ் தருகிறோம். வாதக்காரர்களுக்கு க்ஷீரபலா தைலமும், தன்வந்திரி தைலமும் பயன்படும். கபவாதிகளுக்கு கற்பூராதி தைலமும், பித்தம் அதிகமுள்ளவர்களுக்கு சந்தனாதி தைலமும் சிறந்தது. 'ஷிரோதாரா' சிகிச்சையின்போது, கஸ்டமர்கள் ஹாய்யாகத் தூங்கிவிடுவதும் உண்டு. அந்த அளவுக்கு உடலையும் மனசையும்



● தனிமா சரவணன்





# ஸ்... ஸ்...!



ரிலாக்ஸ் செய்து விடும் எங்கள் ஸ்பா தெரபி" என்கிறார் ஆயுர்வேதிக் தெரபிஸ்ட் அருள்செல்வம்.

"பரபரப்பான வாழ்க்கை முறை கொண்ட டாக்டர்கள், சாஃப்ட்வேர் இன்ஜினியர்கள், நடிகர்கள், தொழிலதிபர்கள் போன்றவர்கள்தான் இங்கே அதிகமாக வருகின்றனர். அதைத் தொடர்ந்து, தலைவலி, முதுகுவலி, தூக்கமின்மை, எடைப் பிரச்னை, முடி உதிர்தல் என ஏகப்பட்ட உபாதைகள். வார இறுதிகளில் விருப்பத்துக்குரிய மசாஜ் தெரபி எடுத்துக்கொண்டு ரிலாக்ஸ்டாகத் திரும்புகிறார்கள். பிரச்னைக்கும், வயசுக்கும், தேவைக்கும் ஏற்ற ஹெல்த் பேக்கேஜ்கள் உள்ளன. சருமத்துக்குப் புதுப் பொலிவு தர, இளமையை நீட்டிக்க, உடல் குளிர்ச்சி பெற, வதங்கிய முகம் மலர... விதவிதமான கூல் ஃபேஷியல்களும் தரப்படுகின்றன. ஆண்களுக்கு மசாஜ் தர மேசுவர்களும், பெண்களுக்கு மசாஜ் தர மேசூஸ்களும் இருப்பதால், குடும்பத்துடன் வந்து குளுகுளு ஸ்பாவில் கோடையைக் கொண்டாடிவிட்டுப் போகிறார்கள்" என்கிறார் லீ மெரிடியன் ஹோட்டலின் பொது மேலாளர் (பொறுப்பு) நளினா சரவணன்.

இரண்டு பக்க மேட்டர் தேற்றிய திருப்தியுடன் வெளியே வந்து, ஜி.எஸ்.டி., ரோட்டில் காலை வைத்தால், வெயில் பட்டையை உரித்தது.

உள்ளே ஸ்பா! வெளியே உஸ்... அப்பா!

- ஐஸ்

## அபூர்வ அருள்!

ஆதிசேஷன் குடை பிடிக்க, சங்கு, சக்கரம் ஏந்திய கரங்களுடன், தாமரை மலர்மீது பாதம் வைத்து அமர்ந்த நிலையில், பிள்ளையார் அருள் பொழியும் அபூர்வத் திருக்கோலத்தை, பொழிச்சலூர் வெங்கடேஸ்வரா நகர் மஹாவிஷ்ணு விநாயகர் ஆலயத்தில் காணலாம். வலது கை பூரண அபயம் தர, இடது கையில் தன்வந்திரிக்கே உரிய ஸ்ரீமஹா அமிர்த கலசம் ஏந்தி, விசேஷ அருள் புரிகிறார். நோய் நொடி நீங்கி, சகல சௌபாக்கியத்தையும் தரும் இவரை மனத்தால் துதித்தாலே நினைத்தது நல்லபடி நிறைவேறும்.

- எஸ்.சுகுணா சீனிவாசன்,
பொழிச்சலூர்



• மஹாவிஷ்ணு விநாயகர்

விநாயகர் சதுர்த்தி விழாவுக்காக என்று செய்யப்பட்ட 'டெம்பரரி பகவான்' இப்போது அழகான நிரந்தரக் கட்டுமானத்தில், தகடு ஸேட் கணபதியாக தினம் தினம் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார்.

புனே நகரின் மார்க்கெட் பகுதியில் போகிற யாருமே இந்தப் பிள்ளையாரின் பார்வையிலிருந்து தப்ப முடியாது. நீளமான வரிசையில் காத்திருந்துதான் தரிசிக்க முடியும். திரும்புகிற போது வழியில் வைத்திருக்கும் இனிப்புப் பொரிப் பிரசாதத்தையும், அழகான வேலைப்பாடமைந்த மூக்குச் செம்பிலிருந்து புனித நீரையும் நாமே எடுத்துக்

# கோடி

* தகடுஸேட் கண்பதி



கொள்ளலாம்.

அந்த வட்டாரத்தி லுள்ள வணிகப் பெருமக்கள் தங்கள் லாபத்தில் ஒரு குறிப்பிட்ட தொகையை இந்த விநாயகருக்குக் காணிக்கையாய்த் தருகிறார்கள். ஒரு டிரஸ்ட் அமைத்து அழகாக நிர்வாகம் பண்ணுகிறார்கள். டீ.வி. திரைப்படப் பிடிப்பின்போது ஏற்பட்ட விபத்தில் காயமடைந்த அமிதாப்பும், தகடு ஸேட் கண்பதியைத்தான் நம்பினாராம். உடல் நிலை குணம் பெற்று வீட்டுக்கு வந்ததும் தம்மைக் காப்பாற்றிய கண பதிக்குத் தந்த காணிக்கை

# ...ருபாய் பிள்ளையார்!

ஒருகோடி ரூபாய் என்கிறார்கள்.

- சுப்ர.பாலன்

படம் : யோகா

## கணபதிக்கு உரிய மலர்கள்

சிறுசண்பகம், சாமந்தி, மல்லிகை, சம்பங்கி, செங்குவளை, தாழை, மகிழம், தாமரை, புன்னை, ஊமத்தை, முல்லை, விஷ்ணு கிரந்தி, வெள்ளைக்காக்கணம், நாகை, மந்தாரை, குரா, கோங்கு, செம்பருத்தி, வெள்ளெருக்கு, அகத்தி ஆகிய இருபது மலர்களும் கணபதிக்குரியன.

- இரா. பார்த்திபன்

## ஐந்து ஊர் ராஜா!

ஊருக்கு ஒரு பிள்ளையார் இருப்பார், ஐந்து ஊருக்கு ஒரு பிள்ளையார் கேள்விப் பட்டிருக்கிறீர்களா! தூத்துக்குடி மாவட்டம், சாத்தான் குளத்துக்கு அருகே உள்ள முத்துக் கிருஷ்ணாபுரம், தளவாய்புரம், ஆறுமுகனேரி, ஸ்ரீரெங்கநாதபுரம், விநாயகர் புரம், ஐந்து ஊர்களுக்கும் இந்தப் பிள்ளையார் கண்கண்ட தெய்வம்.

வீடுகளில் விசேஷமென்றால் பிள்ளையாருக்கு (பொங்கல், சுண்டல்) கொண்டாட்டம்தான்.

கல்யாணமான பெண்ணும் மாப்பிள்ளையும் முதன்முதலில் இந்தக் கோயிலுக்குத்தான் வருவார்கள். அவ்வளவு சக்தி வாய்ந்தவர்.

- ஆர். கமலாராஜசேகரன், பொள்ளாச்சி

(இனிதே விடைபெறுகிறார்)

சிறுகதை

# கவலை



சந்தானத்தைப் பஸ் ஸ்டாண்டில் சந்தித்தான் ரமணி.

மகிழ்ச்சியாக இருந்தது; அவருக்கும்தான். ஒரே ஊர்க்காரர்கள், ஐந்தாண்டுகளுக்குப் பிறகு சந்திப்பு என்றால்... இருக்காதா என்ன? சம்பிரதாய விசாரிப்புகள் முடிந்து சாப்பிடச் சொன்னார் அவர். ஏற்கெனவே சாப்பிட்டிருந்ததால் ‘வேண்டாம்’ என்றான் இவன். ‘டீ’ என்றார். ஏதாவது சாப்பிட்டு, அவர் உறவைப் புதுப்பிக்க வேண்டும் போல் இருந்தது. ‘சரி’ என்றான்.

“என்ன எளப்பா இருக்க?”

“இல்லையே நல்லாத்தானே இருக்கேன்” என்று கைகளைப் பார்த்துக் கொண்டான். நரம்புகள் தெரியவில்லை. உடலையும் பார்த்துக் கொண்டான். குண்டாகத்தான் இருந்தது. தினம் குளிக்கிறோம், உடல் தேய்க்கிறோம். ஆனாலும் எதையும் கூர்ந்து கவனித்தது கிடையாது. அவர் சொன்ன பிறகுதான் கூர்ந்து கவனிக்கத் தோன்றுகிறது. இருந்தாலும் எல்லாமும் சரியாகத்தான் இருக்கின்றன.

பேருந்தின் குளிர் கறுப்புக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். கன்னங்கள்கூட உப்பித்தான் இருந்தன. பிறகு அவர் எதை வைத்து சொல்கிறார் என்கிற கேள்விகள் நிறைந்த பார்வையை அவர் மீது பொழிந்தான்.

“கண்கள் உள்வாங்கிக் கிடக்கு, வயசாயிடுச்சு இல்ல.”

“ஓ அப்படியா!” இவன் சிரித்துக் கொண்டான். வயசாயிடுச்சு என்று



அவர் சொன்னதும், கொஞ்சம் கோபமும் வரத்தான் செய்தது.

அதை ஜீரணிக்கச் சிரமப்பட்டான். சிறிது நேரம் ஊர் விஷயங்களை விசாரித்துவிட்டு, வீட்டை நோக்கி நடந்தான். வழி நெடுகிலும் வருத்தம் வாட்டிக் கொண்டே இருந்தது.

ரமணியின் மனைவி பிரேமா, கல்யாணம் ஆன புதிதில் அவன் அப்பாவோடு ஒப்பிட்டுப் பேசினாள்.

''உங்களுக்கும் வயசானா, உங்க அப்பா மாதிரி கூன் விழுந்திடும் போல இருக்கு.''

ரமணிக்கு 'கர்' என்று கோபம் வந்தது. ''ஏய், என்ன பேசற? வயசானா அப்படித்தான் இருக்கும்; அதுக்காக அவர் போல நான் இருப்பேன்னு எப்படிச் சொல்ற?''

''கோவிச்சிக்காதீங்க. உங்க அப்பா மாதிரி கழுத்து விலா எலும்புங்க உங்களுக்கும் துருத்திக்கிட்டு இருக்கு. முதுகு இலேசா வளைஞ்சிருக்கு...''

அதிலிருந்து கொஞ்சநாள் கழுத்தில் மப்ளரைச் சுற்றிக்கொண்டு திரிந்தான். பிறகு அதன் சொணசொணப்புத் தாங்காமல் தூக்கி எறிந்துவிட்டு, கழுத்து மூடி இருக்கிற பனியனை வாங்கிப் போட்டுக் கொண்டான்.

ஒரு சமயம் ரமணியின் மகள், மீனா கல்யாண ஆல்பத்தை எடுத்து வைத்துக் கொண்டு சொன்னாள்.

''அப்பா நீ நல்லாவே இல்ல; ஒல்லியா அசிங்கமா இருக்கிற. அம்மாத்தான் நல்லா இருக்கு.''

போட்டோ ஆல்பத்தைப் பிடுங்கி எறிந்தான். ''ஏய், போய்ப் படி. பாடத்தைப் படிக்கிறத உட்டுட்டு, படம் பார்க்கிறாளாம் படம். போய்ப் படி'' என்று அடித்து விரட்டினான்.

பாவம் குழந்தை, விம்மிக் கொண்டே போய் புத்தகத்தைத் திறந்து படிக்கத் தொடங்கியது. இடையிடையில் இவனையும் பார்த்து ''அப்பா, உன் பேச்சி கா'' என்பது போல் பார்வையால் சுட்டது.

ரமணிக்கு தன்னுடைய உடம்பை விமர்சிப்பவர்கள் மீது எப்போதுமே கோபம் கொப்பளிக்கும்.

தலையில் முடி கொட்டியது. தலை சீவினால் சீப்பில் கொத்துக் கொத்தாய் வரும்.

மணிநாத்

## விசிலடிக்கிறாங்க!



ரஜினி சார் பைத்தியம் நான். அவரோட படங்கள்னா, முதல் நாள், முதல் ஷோ, பார்க்கிற முதல் ஆள் நானாத்தான் இருப்பேன். அவர் என்னோட 'ரன்' படத்தைப் பார்த்துட்டு கை குலுக்கிப் பாராட்டினப்போ, எனக்குத் தலை கால் புரியலை. ''எல்லாமே உங்கக் கிட்டேயிருந்து எடுத்ததுதான் சார்'' என்று சொன்னேன். அதற்கும் ஒரு ஸ்டைலான புன்னகை பரிசாகக் கிடைத்தது. தட்ஸ் ரஜினி!

**- லிங்குசாமி**

ஊரில் ஒருவன் கேட்டான். "என்ன கவலையோடு இருக்க?"

"தலை முடி கொட்டுது அதான்."

"கவலைப்படாம இரு. கவலை தானா போயிடும்."

"என்ன உளர்ற?"

''உளறலைடா! உண்மையத்தான் சொல்றேன். மனுசன் கவலைப் படறதனாலத்தான் முடி கொட்டுது. நீ கவலைப்படாம இருந்து பாரு, முடி கொட்டறது நின்னுடும்."

இவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

அடுத்து ஒருவன் சொன்னான். "என்னப்பா தலையில கரம்பு தெரியுது. பாதியிலேயே கிழவனாயிடுவ போல இருக்கு."

ரமணிக்கு இரவெல்லாம் தூக்கமில்லாமல் போனது. விடிந்ததும் பக்கத்து வீட்டுக்காரனிடம் சொன்னான்.

"அட, அதுக்கு ஏம்பா கவலைப் படற? அறிவாளியா இருந்தா முடி கொட்டத்தான் செய்யும். ஏதோ இந்த ஊர்ல படிச்சிட்டு, கவிதை கட்டுரைன்னு எழுதுற ஒரே அறிவாளி நீதான். அதான் முடி கொட்டுது. அதுக்காக பெருமைப் படாம, கவலைப் பட்டுகிட்டு."

இவனுக்கு முடியைப் பிய்த்துக் கொள்ளலாம் போல் இருந்தது. 'அதான் ஏற்கெனவே பிச்சிக்கிட்டு இருக்கே. நீ வேற பிக்கணுமா?'ன்னு மனசு வேறு நக்கலடித்தது.

இவன் நேராக சந்தானத்திடம் போனான். அவர் சொல்கிற முடிவுதான் சரியாய் இருக்கும். ஏன்னா அவர்தான் சமுகத்தைக் கூறு போட்டு விளங்க வைப்பார். நெறையப் படிப்பவர். நல்லது கெட்டது தெரிந்தவர்.

"என்னங்க, தலை முடிகொட்டுறவங்கள்ளாம் அறிவாளிங்கறாங்களே, உண்மையா?"

"அப்போ காரல் மார்க்சுக்கு அறிவில்லைங்கிறயா?"

ரமணனுக்கு 'பளார்' என்று அறைந்தாற்போல் இருந்தது. அதானே! அவர் உலகம் ஏற்றுக் கொண்ட அறிவாளியாச்சே! அவருக்குத் தலைமுடி நிறைஞ்சு தானே இருக்கு!

"முடி கொட்டறதுக்கும் அறிவுக்கும் சம்பந்தமில்லப்பா. உடம்பில சத்து குறைஞ்சா, இப்படிப்பட்ட வியாதிகள் எல்லாம் வரும். உன் வயித்துல பூச்சி இருக்கும். அதுக்கு மருந்து சாப்பிடு. யார் யார் வீட்டில எது விளையுதோ, அது உணவில் கூடுதலா இருக்கும். உங்க வீட்டுல புளி விளையுது இல்லையா. புளியைக் குறைச்சு குழம்பு வைக்கச் சொல்லு; எல்லாம் சரியாயிடும். உடலும் பருக்கும்."

சென்னையில் உடன் இருப்பவர்கள் யாரும் உருவமாற்றத்தைக் கவனித்துச் சொல்லவில்லை. தினம் தினம் சந்திக்கிற மனிதர்களுக்கு வளர்ச்சியின் மாற்றம் புலப்படாமல் போயிருக்கலாம். ஆனால் சந்தானம் அப்படி அல்ல. ஏற்கெனவே கிராமத்தில் இவனைப் பார்த்துப் பார்த்து அவர் மனத்தில் பதிந்த உருவம், ஐந்தாண்டுகளுக்குப் பிறகு பார்ப்பதால் பளிச் என்று புலப்படுகிற வித்தியாசம். இத்தனைக்கும் இவன் மீசைக்கும் தலைமுடிக்கும் டை அடித்து, வயதைக் குறைத்துத்தான் வைத்திருந்தான். போலீஸ்காரன் வீட்டில் பதுங்கி இருக்கிற திருடனைப் போல அல்லவா முதுமை கண் குழிகளில் பதுங்கி இருக்கிறது! இதை மறைக்க என்ன செய்யலாம், யோசித்தான். ஆம், கண்ணாடி போடுவதுதான் சரி. குழிகளை மறைத்துக்காட்டுகிற கூலிங்கிளாஸ் கண்ணாடி தான் போட வேண்டும். அதற்கு ஐந்நூறு ரூபாயாவது ஆகுமே!

பாக்கெட்டைத் துழாவி பணத்தை எடுத்து எண்ணிப்பார்த்தான். சரியாக ஐந்நூறு இருந்தது. இன்று ஞாயிற்றுக்கிழமை, கடைகள் இருக்காது. நாளை முதல் வேலையாக கண்ணாடி வாங்கிவிட வேண்டும் என முடிவு செய்து கொண்டே வீட்டில் நுழைந்தான்.

பிரேமா எதிர்வீட்டிலிருந்து யாரையோ திட்டிக் கொண்டே வந்தாள். "எத்தனைமுறை என்கிட்ட அது கொடு, இதுகொடுன்னு வாங்கிப்போய் இருப்ப? இப்ப ஒரு கிண்ணம் மிளகாத்தூள் கேட்டதுக்கு, அவ்வளவு கறாரா இல்லன்னு சொல்லிட்டியே."

ரமணி நிலைக்கண்ணாடி முன் நின்று பார்த்தான். கண் சதைகளை இழுத்துப் பார்த்தான். கண்களை அகல விரித்துப் பார்த்தான்.

"என்ன, கண்ணுல ஏதுனா விழுந்திடுச்சா?" பிரேமா நெருங்கி வந்து கேட்டாள்.

"ஒண்ணுமில்ல, சும்மாதான் பாக்குறேன். ஊருக்குப் போய் வந்தேன் இல்ல; கண்ணு சிவந்திருக்கான்னு பார்த்தேன்" என்று சொல்லி சமாளித்தான்.

மறுநாள் காலையில் ரமணியின் மகள் ஓடிவந்து கத்தினாள் "அம்மா தெரு முக்குல தண்ணி லாரி வந்திருக்கு."

பிரேமா 'தடதட' என்று ஓடினாள். பிளாஸ்டிக் குடங்கள் மோதிக் கொள்கிற சத்தம்.

இவன் கண்களைத் துடைத்துக் கொண்டு, கண்ணாடியின் முன் தோன்றி அழகு பார்த்தான். வட்டக் கண்ணாடி வாங்குவதா? முட்டை வடிவக் கண்ணாடி வாங்குவதா? கை விரல்களை அதற்கு தகுந்தாற்போல் வளைத்து பொருத்தம் பார்த்துக் கொண்டான்.

பிரேமாவும் மீனாவும் காலிக் குடங்களுடன் திரும்பி வந்தார்கள். "கட்டையில போறவனுங்க, தண்ணி உடமாட்ரானுங்க. இந்த லாரி துளசிங்கம் தெருவுக்காம். நாளைக்கித்தான் நம்ம தெருவுக்கு வருமாம். இரண்டு நாளைக்கு ஒரு தரம் தான் தண்ணியாம்!"

"அம்மா, நான் எப்படிக் குளிக்கிறது?"

"ம்... மூஞ்சியக் கழுவிக்கிட்டு பள்ளிக்கூடம் போடி."

"அதுக்குத்தான் ஒரு பிளாஸ்டிக் பாரல் வாங்கி வச்சிருந்தா, இரண்டு நாளைக்கு சேர்த்து தண்ணிபிடிச்சி வச்சிக்கலாமில்ல."

"ஆமா, நா போறேன். எங்க அப்பன் ஊட்டுக்குபோய் எடுத்து வாறேன். போடி போடி, போக்கத்தவளே, போய் வேலையப் பாருடி."

"என்னப்பா, கப்பல் கவுந்தமாதிரி காலையிலேயே கன்னத்துல கைவச்சி உட்கார்ந்துட்டே; ஆபீஸ் போகலையா?" என்றாள் மீனா, ரமணியைப் பார்த்து.

"இல்லம்மா, கண்ணாடி வாங்கப் போகணும்." ●



# எட்டு கல்யாணம் – ஒரே ஜோடி!

"அடடே... வாங்க, வாங்க, இப்பத்தான் வழி தெரிஞ்சுதா? என்ன ரொம்ப கவலையா இருக்காப்பல தெரியறது. அதான் இங்க வந்தாச்சில்ல. அப்புறம் என்ன கவலை...?"

மனதைக் கொள்ளை கொள்கிற மலர்ந்த சிரிப்போடு, எதிரே நின்று வரவேற்கிற உணர்வு ஏற்படுகிறது மெய்யூர் சுந்தர ராஜனையும், சுந்தர வல்லித் தாயாரையும் நேரில் பார்க்கும்போது. திருவல்லிக்கேணி ராகவன்-கமலா தம்பதிக்கும் அப்படியேதான் இருந்தது.

ராகவனுக்கு வசதியான வாழ்க்கைதான். மகன் மகேஷுக்கு 36 வயதாகிறது. ஒரே ஒரு குறை. அந்த வீட்டுக்கு விளக்கேற்ற ஒரு மருமகள் வரமாட்டேனென்கிறாள். 'ஜாதகம் பார்க்க வேண்டாம். சீர், டௌரி எதுவும் வேண்டாம். கல்யாணமும்கூட நாங்களே பண்ணுகிறோம்' என்பது வரை வந்தாயிற்று. பெண் பார்க்கப் போனால் ஏதோ தடங்கல். அப்படியும் மீறி பேச்சு ஆரம்பித்தால், முடிவதற்குள் அந்தப் பெண்ணுக்கு வேறு இடத்தில் முடிந்து விடும்.

ஏதாவது தெய்வ சாபமா? தோஷமா? புரியவில்லை. சுற்றாத கோயில் இல்லை. பண்ணாத தானமில்லை. செய்யாத பரிகாரமில்லை. ஊஹூம்... கடைசியில் ஒரு நாள் கோயிலில் யாரோ ஒரு புண்ணியவான் கேட்டார், "மெய்யூருக்குப் போனீங்களா?"

நல்ல செய்தி காதில் விழவும் அவன் நிர்ணயித்த நேரம் வர வேண்டாமா? வந்தது ஒரு வழியாய். இதோ வந்து விட்டார்கள் மெய்யூருக்கு. செங்கல்பட்டைக் கடந்து பாலாற்றைத் தாண்டி, வலது பக்கம் திரும்பினால் மூணு கிலோமீட்டர்தான்.

அழகான, சிறிய கிராமம். யாரைக் கேட்டாலும் வழி சொல்கிறார்கள். கோயிலும் பழைய காலத்துச் சிறு கோயில்தான்.

பட்டாச்சார் அடித்துச் சொன்னார், "என்ன தோஷமா வேணா இருக்கட்டும். கல்யாணம் கூடி வரலியா, இல்ல ஆனப்புறம் ஏதாச்சும் பிரச்னையா இருக்கா, குழந்தை பாக்கியம் இல்லையா, எதுவானாலும் சரி. இந்த சுந்தர ராஜனுக்கு சிம்பிளா ஒரு கல்யாண உற்சவம் பண்ணி வையுங்கோ. பயப்பட வேணாம், செலவொண்ணும் ஜாஸ்தியில்லே. மிஞ்சிப் போனா மூணு முகூர்த்தம், இல்லை, ஒரு மண்டலம். வேண்டினது நிறைவேறிடும். டெஸ்ட் பண்ணிப் பார்த்துட்டு வந்து சொல்லுங்கோ."

அவர் சொன்னபடியே செய்தார் ராகவன். வேண்டியபடி மூன்றாவது முகூர்த்தத்தில் மகேஷுக்கு கல்யாணம் நிச்சயமானது. மறுபடியும் வந்தார் மெய்யூருக்கு. அடுத்த வருஷம் ராகவன் தாத்தா!

இப்படி நிறைய ராகவன்கள்.



• ஸ்ரீ சுந்தரவல்லி தாயார்



• மூலவர்

**13**ம் நூற்றாண்டில் முகமதியர் படையெடுப்பால் தென்னகக் கோயில் விக்கிரகங்கள் ஆந்திர மலையைத் தேடிப் புறப்பட்டன. ஸ்ரீ ரங்கத்துப் பெருமாள் திருப்பதியில் சென்று தஞ்சமானது போல இந்த சுந்தர ராஜனும், தாயாரும் நாகையிலிருந்து வந்ததாக நம்புகிறார்கள். பாலாற்றைத் தாண்டிப் போக மனமில்லாமல் வெள்ளத்தில் மறைந்து கொண்டார்களாம். உடன் வந்த திருவகீந்திர புரத்து தேவநாதன், பக்கத்தில் செட்டி புண்ணியம் கிராமத்தில் போய்ச் சேர்ந்து கொண்டார். வெள்ளம் வடிந்த பிறகு மெய்யூர் கிராமவாசிகள் இந்த சுந்தர ராஜனின் சிரிப்பழகில் மயங்கி, ஏற்கெனவே இருந்த பல்லவர் காலத்துக் கோயிலில் பிர



• மெய்யூர் அழகன்



• ஏணிக் கண்ணன்

திஷ்டை செய்துவிட்டார்கள். "பொன்னிவர் மேனி, மரகதத்தின் பொங்கிளஞ் சோதி அகலத்தாரம் மின்" என்று திருநாகையில் பாடப்படும் பாசுரங்களைதான் இங்கே பாடுகிறார்கள்.

**க**ல்யாணம் தட்டிப் போகிறதே என்ற கவலையும் சரி, குழந்தை இல்லையே என்ற குறையும் சரி, இந்த மெய்யூர் சுந்தர ராஜனிடம் வந்தால் தீர்ந்து போய்விடும்.

சாட்சியாக, வருகிற பங்குனி 21ல் மட்டும் எட்டு கல்யாண உற்சவங்கள் - நடக்கக் காத்திருக்கின்றன, இந்த சுந்தர ராஜன் - சுந்தரவல்லி தம்பதிக்கு!

**- வி**

# ஓட்டு மூட்டை!

பங்களூரிலிருந்து ஊட்டிக்குப் போவதற்கு ரயில் வழியும் இருக்கிறது, பஸ் மார்க்கமும் இருக்கிறது. இரண்டு மில்லாமல், பேனா முனை வழியாகவும் போகலாம். இப்போது மூன்றாவது சொன்ன வழியில் போவோம்.

இந்தியாவிலேயே கோடைக் கால வாசஸ்தலங்களுக்குள், உதகமண்டலம்தான் தலைமை வகிக்கிற தென்பதில் சந்தேகம் இல்லை. ரயில்வே விளம்பரங்கள் அப்படித்தான் சொல்கின்றன.

நீலகிரியில் வசிப்பது தேகத்துக்கு ஆரோக்யமும், மனத்துக்கு உற்சாகமும் அளிக்கவல்லது. ஆனால் இதை நீங்கள் மறந்து விடாமல் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். ஞாபகப்படுத்திக் கொள்ள அவசியமும் அடிக்கடி நேரும். போன புதிதில், பாதங்களின் ஓரங்கள் எல்லாம் வெடித்து விடும். எப்போதும் காலுறை போட்டுக் கொள்ள வேண்டும். வெறுங் காலுடன் நடக்காமலும் வெகு ஜாக்கிரதையாக இருந்தால் தப்பலாம். அப்புறம், வயோதிகர்களுக்கு முழங்கால் மூட்டில் பிடிப்பு வந்தாலும் வந்துவிடும். உதடுகளோ, கோடைக்கால வயல்களைப் போல் பிளந்து போகும். அப்போதெல்லாம் ''ஆரோக்கியம்'' ஆரோக்கியம்'' என்று உருப் போட்டுக் கொண்டாலொழியக் கஷ்டமாய்த்தான் இருக்கும். அதுபோலவே, இரவு நேரங்களில் குளிரால் நடுங்கிக் கொண்டு தூக்கம் வராமல் கஷ்டப்படும் போதும், ''உற்சாகம், உற்சாகம்' என்று உச்சஸ்வரத்தில் கோஷிப்பது அவசியம்.



நீலகிரியில் குளிர் அதிகம் தெரியாமல் இருப்பதற்கு இன்னும் ஒரு முக்கியமான வழி உண்டு. ஓரிடத்தில் உட்கார்ந்திராமல் நடமாடிக் கொண்டேயிருக்க வேண்டும். வேகமாக நடந்து கொண்டேயிருந்தால் குளிர் தெரியாது. நடப்பதற்கு உற்சாகம் அளிப்பதற்கு வேண்டிய தூண்டுகோல்களும் ஏராளமாக இருக்கின்றன. ஊட்டியிலிருந்து எட்டு மைல் தூரத்தில் 'தொட்டபெட்டா' என்ற மலைச்சிகரம்



இருக்கிறது. தென்னிந்தியாவில் இதுதான் மிகவும் உயரமான மலைச்சிகரம். அதில் ஏறி நின்று, "இந்த நிமிஷத்தில் இந்த நாட்டில் உள்ளவர்கள் அனைவரிலும் நானே உயர்ந்தவன்" என்று உண்மைக்கு மாறுபடாமல் ஒருவன் சொல்லிக் கொள்ளலாம்.

இன்னும், 'டைகர் ஹில்' என்ற ஒரு குன்று, ஊட்டிக்கு மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கே 'டைகர் கேவ்' (புலிக் குகை) என்னும் பெயருடைய ஒரு குகையும் உண்டு. நீலகிரிக்குப் போகிறவர்கள் எல்லாரும் மேற்படி குன்றுக்குச் சென்று, அந்தக் குகையைக் கட்டாயம் பார்த்து வர வேண்டும்.

நானும் இன்னும் மூன்று சிநேகிதர்களுமாக வெகு கஷ்டப்பட்டுத் தட்டுத் தடுமாறி அங்கே போய்ச் சேர்ந்தோம். முழங்கால் வலியைக் கூடப் பொருட்படுத்தவில்லை. அசல் காட்டுப்புலி ஒன்றை நேருக்கு நேர் பார்க்கப் போகிறோம் என்னும் ஆசைதான் அவ்வளவு உற்சாகமளித்தது. ஆனால் எவ்வளவு பெரிய ஏமாற்றம்! 'புலிக் குகை' என்னும் பெயர் சுத்த மோசடி என்று கண்டோம். அந்தக் குகையில் புலியே இல்லை; கிலிகூட இல்லை. பின் என்ன இருந்தது தெரியுமா? கன்னங்கரிய இருட்டு!

இருட்டு என்னமோ அபூர்வமான இருட்டுதான். அதன் அழகை வர்ணிக்கவே முடியாது. ஆனால் அவ்வளவு அழகான, அருமையான இருட்டை, எதற்காக அவ்வளவு தூரத்தில் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறார்கள் என்பதுதான் தெரியவில்லை! எங்கேயாவது சமீபத்தில், வெட்ட வெளிச்சமான இடத்தில் வைத்திருந்தால் கஷ்டமில்லாமல் வந்து பார்த்து சந்தோஷப்பட மாட்டோமா?




மேலே நான் எழுதியிருப்பதெல்லாவற்றையும்விட கொடைக்கானலைப் பற்றி நான் எழுதப் போவதைத்தான் நீங்கள் அதிகம் விரும்புவீர்கள். கேளுங்கள், கொடைக்கானலைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அங்கே நான் போனதேயில்லை.

**- கல்கி களஞ்சியம்,**
**வானதி பதிப்பகம்**

# 36. கடன் தீர்த்த பல்லவன்

அகந்தை கொண்டவன் அடையும் வெற்றியும், அறிவுள்ளவன் அடையும் தோல்வியும் வெற்றி தோல்விகளே அல்ல. அதிலும் பல்லவ நந்திவர்மனை வாட் போரில் வென்று, அவன் கரத்திலிருந்து வாளைப் பறிப்பதென்பது, கனவிலும்கூட எண்ணிப் பார்க்க இயலாதது என்பதை நன்றாகவே அறிந்திருந்த பாண்டிய மன்னன் திகைத்து நின்றிருந்தான். அவன் திகைப்பை இன்னும் உயர்த்த நெருங்கி வந்த நந்திவர்மன், "பாண்டிய மன்னா, இந்தப் போரில் நான் தோற்றுவிட்டேன். போர் நிறுத்தத் தாரைகளை ஒலித்து போரை நிறுத்த உத்தரவிடுங்கள். என்னைச் சிறை செய்து விடுங்கள்" என்றான். பல்லவ வீரர்களின் பிரிவும் வாட்களை எறிந்துவிட்டு, நந்திவர்மனின் பின்னால் சரணடையத் தயாராக வரிசைகளில் நின்றது.

அந்த நாடகத்தைக் கண்டு வரகுணன் மட்டுமின்றி, விக்கிரம வரையனும், நெருங்கி வந்து கொண்டிருந்த பராந்தகனும் மற்ற உபதலைவர்களும் திகைத்தனர்.

உடனடியாகப் போரை நிறுத்த உத்தரவிட்ட வரகுணன், எஞ்சிய ராஷ்டிரகூடர்களையும், கங்கர்களையும் ஆயுதங்களைப் பறித்து தஞ்சைக் கோட்டைக்கு அழைத்துச் செல்லவும் உத்தரவிட்டான். வாழ்நாளில் தனக்கு மறக்கவே இயலாத வாட்பயிற்சி அளித்து, தரையில் விழுந்து கிடந்த நந்திவர்மனது வாளை, தானே கீழிறங்கி எடுத்து வந்த பாண்டிய மன்னன், நந்திவர்மனிடம் அதை இரு கரங்களாலும் அளித்து, அந்த வெண்ணிறப் புரவியின் கயிறுகளைப் பிடித்து அழைத்துக் கொண்டு தஞ்சைக் கோட்டையை நோக்கி நடந்தான். நந்திவர்மனின் முகத்தில் அதே மாறாத புன்னகை மலர்ந்து கிடந்தது.

இரவில் முதல் ஜாமத்தில் தஞ்சை அரண்மனை மேன் மாடத்துக் கூடத்தில் அமர்ந்திருந்த அனைவர் முகங்களிலும் திருப்தியும் ஆனந்தமும் நிரவிக்கிடந்தன.

பாண்டிய மன்னனின் விழிகள் சுற்றியிருந்தவர்களை ஒருமுறை நோக்கிவிட்டு, நந்திவர்மனை நோக்கின.

"பல்லவ மன்னர் நடத்தியது போராகத் தெரியவில்லை. வெறும் நாடகமாய்த் தானிருந்தது'' என்றான் பாண்டிய வரகுணன்.

''ஆம். நாடகம்தான். உலக வாழ்க்கையே ஒரு நாடகம் தானே மன்னா'' என்றான் நந்திவர்மன்.

''இந்த நாடகத்தில் அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதையும் தாங்களே கூறுங்கள்''

''போரில் எஞ்சிய ராஷ்டிரகூடர்களையும் கங்கர்களையும் சிறையில் அடைத்து விடுங்கள். வடக்கே துருவன் நடத்திக் கொண்டிருக்கும் போர் முடியும் தறுவாயிலிருக்கிறது. எனவே மகாராணிக்கு ஓலையொன்று அனுப்புங்கள்''

"என்னவென்று?"

''என்னைச் சிறை வைத்திருப்பதாகவும், கொற்கை முத்துக்களில் மீட்டவை போக எஞ்சியிருக்கும் அனைத்தையும், சோழநாட்டிலிருந்து கொள்ளையடிக்கப்பட்ட செல்வங்களையும் திரும்ப அளித்து, என்னை மீட்டுக் கொள்ளலாம் என்று... அது மட்டுமல்ல...''

"வேறென்ன?"

"துருவனுடன் நடந்த போரில் மகாராஜா கோவிந்தர் களத்தில் காணப்படவில்லை. என்ன ஆனார் என்பதும் தெரியவில்லை. துருவன் இன்னும் இரு தினங்களில் ராஷ்டிர கூட அரியணையில் அமர்ந்து விடுவான். அவன் அரியணையில் அமர்ந்ததும் காஞ்சியில் அவனைச் சிறை வைத்த குற்றத்துக்காக, என்னுடன் போர்

# மகுட வைரம்

தொடுக்க வரும்படி கூறியிருக்கிறேன்"

பாண்டிய மன்னனும் மற்றவர்களும் சற்றுத் திகைத்தார்கள். "இது அநீதி மன்னா, உங்களால் விடுவிக்கப்பட்டு, உதவியும் பெற்று அரியணையில் அமர்பவன், உங்கள்மீதே போர் தொடுப்பானா?" விக்கிரமவரையரின் கேள்வியில் திகைப்பு பூரணமாகத் தொனித்தது.

"படைத் தலைவரே, துருவனைச் சிறை செய்தது மகாராணிதானென்றாலும், மன்னனான நான்தான் அதைச் செய்தேனென்று உலகம் சொல்லும். பல்லவமன்னன் அனுமதிக்காமல் காஞ்சியில் ஒருவனைச் சிறையில் வைப்பது என்பதை உலகம் ஏற்காது."

"துருவன் காஞ்சியின்



மீது போர் தொடுப்பதால் என்ன பயன் ஏற்படப் போகிறது?"

"பாண்டிய மன்னா, காஞ்சியைக் காக்க தற்போது ராஷ்டிரகூட வீரர்கள் இல்லை. என்னிடமிருக்கும் பல்லவ வீரர்கள் மிகக் குறைவு. துருவனுடன் போரிட இவர்கள் போதாது. எனவே..."

"எனவே...?"

"போரைத் தவிர்க்க நான் துருவனுடன் சமாதானத்தைக் கோருவேன். அவனுக்குக் கப்பம்கட்டும் விதமாக, அல்லது பரிசுகளாக ஆயிரம் களிறுகளையும், அவை சுமக்குமளவுக்கு பொன்னும், மணியும், இரண்டாயிரம் புரவிகளையும், தேர்களையும் அளிப்பேன். காஞ்சிக்கு வந்து இவற்றைப் பெற்றுக் கொள்ளும் துருவன், காஞ்சியின் எல்லையைக் கடந்ததும், சோழ நாட்டுக்கு இவற்றை அனுப்பி வைத்துவிடுவான். சோழ மக்கள் இது வரை இழந்ததைப் பெறவும், நாடு விரைவில் நல்லநிலையை அடையவும் இவை உதவும்" என்று முடித்தான் நந்திவர்மன்.

பாண்டிய மன்னனும், விக்கிரமவரையனும், பராந்தகனும் திகைப்பிலிருந்து விடுபட நெடுநேரமாயிற்று. இருக்கையை விட்டு எழுந்து சென்ற விக்கிரமவரையன், பல்லவ மன்னனை நெருங்கி அவன் கரங்களைப் பிடித்துக் கொண்டான். "மன்னவா, போர் என்னவோ முடிந்து விட்டது. இனி சோழ நாட்டை மீண்டும் நல்ல நிலைமைக்குக் கொண்டுவரவும், படைகளை பலப்படுத்தவும், வீடுகளையும் செல்வங்களையும் இழந்த சோழ மக்களுக்கு ஓரளவுக்கேனும் ஈடு செய்யவும் வழியேதுமில்லையே என தவித்துக் கொண்டிருந்தேன். என் கவலையைத் தீர்த்து வைத்துவிட்டீர்கள். இதற்கு என்ன கைம்மாறு செய்வேன் நான்" என்றான் குரலில் உணர்ச்சி பொங்க.

நந்திவர்மன் முகத்தில் அதே நிதானம் நிலவியது. "படைத்தலைவரே, கைம்மாறு செய்ய இதில் ஏதுமில்லை. உங்கள் பொருளைத் திரும்ப உங்களிடம் ஒப்படைக்கிறேன், அவ்வளவே. என்னாலியன்றவரை என்னிடமிருப்பதையும் சேர்த்து அனுப்புகிறேன். நீங்கள் கைம்மாறு ஏதும் செய்ய நினைத்தால், இனி போரும் பூசலுமின்றி நம் மக்கள் நலமாக இருக்குமாறு பார்த்துக் கொள்ளுங்கள், போதும்"

நந்திவர்மனின் ஏற்பாடுகளும், திட்டங்களும் அனைவரையும் சிலைகளாக அடித்திருந்தன. உணர்ச்சிப் பெருக்கால் ஏற்பட்ட மௌனம் சற்று நேரம் நிலவியது அங்கே.

மீண்டும் நந்திவர்மனின் குரல் ஒலித்தது "பாண்டிய மன்னா. படைத்தலைவரே, நான் கூறியவைகளன்றி எனக்கு வேண்டுவதும் ஒன்றிருக்கிறது"

"கூறுங்கள். எதுவாயினும் செய்கிறோம்" என்றார் விக்கிரமவரையர்.

"நீங்கள் ஏதும் செய்ய வேண்டாம். பராந்தகனிடம் நான் கடன் பட்டிருக்கிறேன். அதைத் தீர்க்க அவன் உதவினால் போதுமானது."

"விளங்கவில்லை மன்னா"

"பராந்தகன் வேறு யாருமல்ல. நரசிம்மவர்மரின் சோழவம்சத்துக் கிளையில் வந்தவன். எனக்கு மூத்த மகனாக நான் கருதுபவன். காஞ்சி அரியணை அவனுக்கு உரியது. இந்தப் போருக்கு முன்பே அந்த உரிமையை அளிக்கவும் விரும்பினேன். அவன் ஏற்க மறுத்து, என்னைக் கடன் பட்டவனாக்கி விட்டான். அவன் விரும்பும் எதையும் தரச் சித்தமாக இருக்கிறேன். அவன் நல்ல ஸ்திதியில் இருப்பதைக் காண விரும்புகிறேன். இதை நிறைவேற்றி வைத்தால் என் மனம் நிம்மதியடையும்."

அனைவரது விழிகளும் பராந்தகனை நோக்கித் திரும்பின.

பராந்தகன் முகத்தில் சங்கடம் படர்ந்தது. அரியணைகளுக்கும் அரண்மனைகளுக்கும், அமைதியான வாழ்வுடன் அறவே தொடர்பில்லையென்



பதை திட்டவட்டமாக அறிந்திருந்த பராந்தகனுக்கு, நந்திவர்மனின் வேண்டு கோளைப் புறக்கணிக்கவோ, மறுத்துக் கூறவோ மனமும் வரவில்லை, ஏற்றுக் கொள்ளவும் அவன் சித்தமும் இடம் தரவில்லை.

இரு மன்னர்களையும் பணிந்து தலை வரையும் ஏறிட்ட பராந்தகனின் சொற்கள் தெளிவாகவும், திடமாகவும் ஒலித்தன, "மன்னவா, என் உடலில் ஓடுவது பல்லவ வம்சத்து ரத்தம்தானென்பதிலோ, என் னிடமிருக்கும் இந்த வாள் நரசிம்மவர் மருடையது என்பதிலோ ஏதும் சந்தேக மில்லை. முன்பே நான் கூறியதுபோல எளிய, நிம்மதியான வாழ்வையே விரும்பு கிறேன். அவசியமானால், சோழ மண் ணுக்காக இந்த வாளை மீண்டும் ஏந்தவும் தயங்கமாட்டேன். என்னை என் வழியில் செல்ல அனுமதியுங்கள்."

இருவரது தவிப்புகளும் சுற்றியிருந்தவர் களுக்குப் புரிந்தாலும், இருவருக்கும் சாந்தியளிக்கக்கூடிய பதிலேதும் எவரா லும் கூற இயலவில்லை. பல்லவ மன்ன னால் திணிக்கப்பட்ட வெற்றி, பாண்டிய வரகுணனை சங்கடத்தில் ஆழ்த்தியிருந்த தென்றால், பராந்தகன் எதையும் ஏற்க மறுப்பது நந்திவர்மனையும் சங்கடப் படுத்தியது. சோழ மண்ணை விடுவித்து, அதன் வளத்துக்காக வழி செய்திருக்கும் நந்திவர்மனின் கோரிக்கையை ஏற்க இயலாதிருப்பது பராந்தகனையும், அதற்கு என்ன கைம்மாறு செய்வது என்ற சிந் தனை விக்கிரமவரையரையும் பரம சங்கடத்தில் ஆழ்த்தியிருந்தது.

அதுவரை மௌனமாக அத்தனையும் கவனித்துக் கொண்டிருந்த பகதத்தன் நிமிர்ந்தான். அவன் அடுத்துக் கூறிய வார்த்தைகள், அத்தனை தவிப்புக்களை யும் தீர்க்கும் வழியாக ஒலித்தன.

நந்திவர்மனை நோக்கிய பகதத்தன், "மன்னவா, பராந்தகன் விரும்பக் கூடிய தும் ஒன்றிருக்கிறது. அதை அவன் பெறுவதற்கும், முறையாக அடைவதற்கும் தாங்கள் உதவினால், உங்கள் தவிப்பும் கடனும் தீருமா?" என்றான்.

நந்திவர்மனின் விழிகள் பளிச்சிட்டன. "அப்படி ஒன்று இருக்கிறதா? அப்படி நான் நடத்தித் தரக்கூடியது இருந்தால் உடனே சொல் பகதத்தா" என்றான் ஆவலுடன். சுற்றியிருந்தவர்கள் முகங்களி லும் ஆவல் தெறித்தது.

"மன்னவா, அபிமன்யுவுக்காக விராட ராஜனிடம் பெண் கேட்ட அர்ச்சுனன் செய்ததைத்தான் நீங்கள் செய்ய வேண் டும். எப்படியும் நடக்கப் போவதுதான் என்றாலும், பராந்தகனை உங்கள் மகன் என்றுதானே கூறினீர்கள்? உங்கள் மகனாக அவனை நிறுத்தி திருமணத்தை நடத்தி வையுங்கள். உங்கள் விராட ராஜன், இதோ பாண்டிய மன்னர் எதிரி லிருக்கிறார். பிறகென்ன? கேளுங்கள்"

மூன்று அரசுகளையும் இணைத்து விடும் அந்தப் புராணத்தையும், யோசனை யையும் கேட்ட அனைவரது முகங்களி லுமே மலர்ச்சி பிறந்தன. பராந்தகனின் முகத்தில் இலேசாக வெட்கச் சாயையும் படர்ந்தது.

நந்திவர்மன் மகிழ்ச்சி பொங்க பல மாக நகைத்தான். நகைப்பினூடே "பாண் டிய மன்னா, என் மகனுக்காக உங்களிடம் பெண் கேட்கிறேன். பெண்ணும் என் மகனை விரும்புவதாகத் தெரிகிறது. எனவே நீங்களாகவே முன் வந்து அளித்து விடுங்கள். இல்லையேல் இப்போது நிகழ்ந்ததைப் போல மீண்டும் ஒரு போரை நிகழ்த்த என் பல்லவ வீரர்களோடு மதுரைக்கு வர வேண்டியதாயிருக்கும்" என்றான்.

வரகுணனின் பதிலும் நகைப்பினூடே வந்தது. "இதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. நீங்கள் என்னிடம் பெண் கேட்பதானால், உங்கள் மகனோடும் வீரர் களோடும், உரிய சீர் வரிசைகளோடும் மதுரைக்கு வந்து, முறைப்படி கேளுங்கள். தருகிறேன். இல்லையென்றால் மீண்டும் போரிடலாம். நான் சித்தமாக இருக் கிறேன்" என்றான்.

(அடுத்த இதழில் முடியும்)

"என் பேர்ல இருக்கிற வழக்கை மாத்த முடியுமா வக்கீல் சார்?"

"வேற மாநிலத்துக்கு மாத்தணுமா?"

"வேற யார் பேர்லயாவது மாத்திட முடியுமான்னு கேட்கிறேன்..."

- பம்மல் நாகராஜன்

தெம்புத்துப் படிங்க - 22



# எது சரியான பாதை?

தென்கச்சி சுவாமிநாதன்

இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருக்கிறது.

அமெரிக்கப் படைப் பிரிவு ஒன்று அப்போது பிலிப்பைன்ஸ் நாட்டில் இருந்தது.

அதன் தளபதியாக புதிதாக வந்து பொறுப்பேற்றுக் கொண்டார் ஒருவர்.

அவர் பெயர் மக் ஆர்தர்.

அவர் வந்து தம் இருக்கையில் அமர்ந்ததும், உதவியாளர் ஒரு புத்தகத்தைத் தூக்கிக் கொண்டு வந்தார்.

"என்ன இது?"

"உங்களுக்கு முன்னாடி பதவி வகிச்ச தளபதிகள் எழுதி வச்சிருக்கிற குறிப்புகள் சார்."

"என்னென்ன சந்தர்ப்பங்களில் எப்படி எப்படி நடந்துக்கிட்டாங்க... அப்படிங்கற விவரமெல்லாம் இதுலே இருக்கு... இது உங்களுக்கு உபயோகப் படும்ன்னு நினைக்கிறேன்."

"இந்தப் புத்தகத்தின் பிரதிகள் இன்னும் எத்தனை இருக்கு... இங்கே...?"

"ஆறு பிரதிகள்....!"

"அத்தனைப் பிரதிகளையும் இங்கே எடுத்துக்கிட்டு வா!"

உதவியாளர் உடனே ஓடிப் போய் அவற்றை எடுத்து வந்தார்.

தளபதியின் முன்னால் வைத்தார்.

"இவ்வளவையும் என் கண் முன்னால் கொளுத்தி விடு!"

இந்த உத்தரவு உதவியாளரைத் திகைக்க வைத்தது.

மக் ஆர்தர் சொன்னார் :

"எனக்கு முன்னால் இருந்த தளபதிகள் கையாண்ட வழிமுறைகளுக்குக் கட்டுப்பட நான் தயாரில்லை! பிரச்னைகள் ஏற்படும்போது... என்ன பிரச்னை என்பதை என்னிடம் சொல்லுங்கள்... எனக்கு என்ன தீர்வு தோன்றுகிறதோ, அதைச் சொல்கிறேன். அதன்படி நடவடிக்கை எடுங்கள். அது போதும்!"

நண்பர்களே!

பழைய வழிமுறைகள் புதிய பிரச்னைகளுக்குத் தீர்வாக அமைய வேண்டும் என்கிற அவசியமில்லை!

இன்னொருவரைப் பின்பற்றிப் போகலாம் என்று நினைக்கிறவர்கள், தம்முடைய பாதையைத் தவற விட்டு விடுகிறார்கள்.

காட்டுக்குள் சென்ற ஒருவனுக்குத் திரும்பி வர வழி தெரியவில்லை. சுற்றிச் சுற்றி வந்தான். நல்லவேளையாக ஒருவனைக் கண்டுபிடித்தான். ஓடிப் போய் அவனிடம்,

"நீங்க வந்ததாலே நான் பிழைச்சேன்!"

"என்ன சொல்றீங்க?"

"இந்தக் காட்டுக்குள்ளே மூன்று மணி நேரமா வழி தெரியாமே சுத்திக்கிட்டிருக்கேன்...!"

"ஐயோ... பாவமே...!"

"நீங்க என்ன சொல்றீங்க?"

"நான் ஆறு மணி நேரமா வழி தெரியாமே சுத்திக்கிட்டிருக்கேன்!"

(நிறைவுறுகிறது)

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** உங்க தெய்வபலம் கூடறதால தெளிவான மனநிலையும், துணிவும் நம்பிக்கையும் உங்களுக்கு வெற்றிகளைத் தேடித்தர்ற வாரங்க இது. சீரான பண வசதியும், முக்கியமானவங்க ஆதரவும் கை கொடுக்கும். சிலருக்கு வெளிநாட்டுப் பயணங்கள் போக நேரலாம். ஆபீசில் உற்சாகமான சூழ்நிலை நிலவும். தடைப்பட்டுப் போன உங்க கோரிக்கைகள் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில முன்னேற்றமும், லாபமும் கூடும். கொடுக்கல், வாங்கல் சுமுகமா இருக்கும். குடும்பத்தில குதூகலமும், ஒற்றுமையும் நிறையும். சொத்து, வழக்கு விவகாரங்களில் சாதகமான முடிவு கிட்டும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**ரிஷபம் :** உங்க பூர்வ புண்ணியஸ்தானத்தில் குரு சேர்ந்து மத்த கிரகங்களைப் பார்க்கிறதால தாராள பண நடமாட்டமும், ஆரோக்கிய மேன்மையும் உண்டாகும். எதிர்ப்புகள் மறையும். ஆபீசில் இதுவரை இருந்த குழப்பங்கள், பிரச்னைகள் மறைஞ்சு உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். சிலருக்கு பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படலாம். தொழில், வியாபாரத்தில் எதிர்பார்த்த உதவிகள் கிடைக்கும். புதிய தொழில்ல ஈடுபடும் சந்தர்ப்பம் கிட்டும். குடும்பத்தில் குருபலம் பூரணமா இருப்பதால சுப காரியங்கள் கூடிவரும். மக்களால் மகிழ்ச்சி ஏற்படும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**மிதுனம் :** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு இருக்கிறவங்க சாதனைகள் படைக்கிற நேரம். தெளிவான சிந்தனையும், எதிர்ப்புகள் மறைஞ்சு போறதும் காரியங்களை சுலபமாக சாதிக்கும். புதிய அறிமுகங்கள் சிலது கிடைக்கும். வி.ஐ.பி.க்கள் ஆதரவு பக்கபலமா இருக்கும். ஆபீசில் கொஞ்சம் அதிக உழைப்பைக் காட்ட வேண்டியிருக்கும். அதுக்கேத்த பலனும், பாராட்டும் கிடைக்கும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு முன்னேற்றமான வாரம். கொடுக்கல் - வாங்கல் சமயத்தில் கை கொடுக்கும். குடும்பத்தில மக்கள் படிப்பு, எதிர்காலம் வளமாகிறதுக்கான அறிகுறி கிட்டும். எதிர்பாராத பயணம் நேரும். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.

**கடகம் :** இதுவரை தாமதம், தடங்கல்னு இருந்த முக்கிய காரியங்கள் எல்லாம் மளமளன்னு நிறைவேற ஆரம்பிக்கும். வி.ஐ.பி.க்களோட உதவி, சரளமான பண வசதின்னு மகிழ்ச்சிகரமான வாரம். ஆபீசில புதிய திருப்பங்கள், உற்சாகமான சூழ்நிலைன்னு முன்னேற்றமான வாரம். தொழில், வியாபாரத்தில் நெருக்கடிகள் தீர்ந்து நிம்மதி கிடைக்கும். வரவேண்டிய பாக்கிகள் வந்து சேர்ந்து கடன் தொல்லையைக் குறைக்கும். வெளிநாட்டுத் தொழிலும், கூட்டுத் தொழிலும் முன்னேற்றம் காணும். குடும்பத்தில் ஒற்றுமை கூடும். கருத்து வேறுபாடுகள் மறையும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சியைக் கூட்டும்.

**சிம்மம் :** சகல காரியங்கள்லேயும் அனுகூலமான திருப்பங்கள் ஏற்படுற வாரம் இது. எதிரிகள் அடங்கி ஒடுங்கி வழியைவிட்டு விலகிப் போயிடுவாங்க.

விருச்சிக ராசிக்காரரான மனீஷா கொய்ராலாவுக்கு புதிய பொருள் சேர்க்கை உண்டாகும்!



**30.3.2005 முதல் 5.4.2005 வரை**

தெய்வீக ஈடுபாடு, தாராளமான பண வரவுன்னு மகிழ்ச்சிகரமான நேரம் கூடி வரும். ஆபீஸ்லயும் இது அனுகூலமான நேரம். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். வெளியூர் / வெளிநாடு பயணம் சிலருக்கு நேரிடும். தொழில், வியாபாரத்தில அபி விருத்தி ஏற்படும். புதிய அனுகூலமான திருப்பங்கள் ஏற்படும். குடும்பத்தில சுப காரிய முயற்சிகள் வெற்றி பெறும். உடன் பிறந்தவர்கள் ஆதரவு கிட்டும். பெண் களுக்கு புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**கன்னி** : கல்வி சம்பந்தமான துறையில இருக்கிறவங்களுக்கு முன்னேற்றமான வாரம்.




ஆராய்ச்சியில ஈடுபட்டிருக்கிறவங்களுக்கு சாதனை படைக்க வாய்ப்புகள் கூடி வரும். ஆபிசில் நல்ல திருப்பங்கள் சிலது காத்திருக்கு. பதவி உயர்வு, இடமாற்றம் சிலருக்கு நேரிடும். பிரச்னைகள் குறைஞ்சு சுமுகமான சூழல் ஏற்படும். தொழில், வியாபாரம் முன்னேற்றம் காணும். புதிய தொழில் தொடங்க நினைக்கிறவங்க தொடங்கலாம். குடும்பத்தில இதுவரை இருந்த கருத்து வேறுபாடுகள் மறைஞ்சு, ஒற்றுமை கூடும். வெளிநாட்டிலிருந்து மக்கள் வருகை ஏற்படும். பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மையும், புதிய பொருள் சேர்க்கையும் ஏற்படும்.

**துலாம்** : குரு-புதன் பரிவர்த்தனையால சகலவிதங்களிலும் அனுகூலமான முன்னேற்றம் ஏற்படும். எதிர்ப்புகள் விலகி சுமுகமான சூழ்நிலை நிலவும். துணிவும், நம்பிக்கை அதிகரிக்கும். வி.ஐ.பிக்கள் ஆதரவு கிட்டும். ஆபீசில் குழப்பங்கள், சஞ்சலங்கள் எல்லாம் மறைஞ்சு தெளிவான சூழ்நிலை நிலவும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். இட மாற்றம் சிலருக்கு ஏற்படலாம். தொழில், வியாபாரத்தில அனுகூலமான திருப்பம் ஏற்படும். எதிர்பார்த்த உதவிகள் கிட்டும். கூட்டுத் தொழிலில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்பத்தில அமைதியும் ஆனந்தமும் அதிகரிக்கும். சுபகாரியங்கள் நிறைவேறும். பெண்களுக்கு ஸ்தல யாத்திரை, சுபகாரியங்களில் ஈடுபாடு என்று மனநிறைவு கிட்டும்.

**விருச்சிகம்** : உங்க பூர்வ புண்ணியஸ்தானத்தில குரு சஞ்சாரம்கறதால எல்லா வகையிலும் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாகும். தாராளமான பண நடமாட்டம், தெய்வீக காரியங்களில் ஈடுபாடு உண்டாகும். ஆபீசில இதுவரை இருந்த பிரச்னைகள், குழப்பங்கள் தீர்ந்து அதிர்ஷ்டமான திருப்பங்கள் ஏற்படும். பதவி உயர்வு இடமாற்றம் சிலருக்கு ஏற்படலாம். தொழில், வியாபாரத்திலேயும் லாபம் கூடி, நெருக்கடிகள் மறையும். எதிர்பார்த்த உதவி வந்து சேரும். வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். குடும்பத்தில் ஒற்றுமை அதிகரிக்கும். பூர்வீக சொத்து விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் கிட்டும். பெண்களுக்கு உடன் பிறந்தவர் ஆதரவும், புதிய பொருள் சேர்க்கையும் உண்டாகும்.

**தனுசு** : எதிர்பார்த்த பயணம், புது அறிமுகம், தேவைக்கேற்ற பணவரவுன்னு உற்சாகமான வாரங்க இது. எல்லாக் காரியங்களிலேயும் முன்னேற்றம் ஏற்பட்டு மகிழ்ச்சியும் திருப்தியும் கிட்டும். ஆபீசில் இதுவரை நிறைவேறாமலிருந்த உங்க கோரிக்கைகள் நிறைவேறும். சிலருக்கு இடமாற்றம் நேரிடும். தொழில், வியாபாரத்தில கொடுக்கல் - வாங்கல் கை கொடுக்கும். எதிர்பார்த்த உதவிகள் வந்து சேரும். குடும்பத்தில உறவினர்கள் ஒற்றுமை கூடி, தாமதமாகி வந்த சுப காரியங்கள் நிறைவேறும். பெண்களுக்கு

மகிழ்ச்சியான வாரம். எண்ணம் போலவே எல்லாம் நிறைவேறும்.

**மகரம் :** தெய்வ பலமும், தெய்வீக ஈடுபாடும் கூடி உங்களுக்கு எல்லாக் காரியங்கள்லேயும் பக்க பலமா நிக்கும். அரசாங்க விஷயங்கள் அனுகூலமா நிறைவேறும். எதிர்ப்புகள் மறைந்து தெளிவான முன்னேற்றம் கூடும். ஆபீசில் மேற்கொள்ளும் எந்த வேலையும் சுலபமாக நிறைவேறி சுமுகமான சூழ்நிலை நிலவும். தொழில், வியாபாரத்தில கொடுக்கல் - வாங்கல் அனுகூலம் தரும். எதிர்பார்த்த உதவிகள் வந்து சேரும். போட்டிகள் அடங்கிப் போகும். குடும்பத்தில் ஒற்றுமையும், குதூகலமும் கூடும். சுபகாரிய முயற்சிகள் பலிதமாகும். பெண்களுக்கு தங்கள் எண்ணம் போல எல்லா வகையிலும் அனுகூல பலன்கள் கிட்டும்.

**கும்பம் :** திட்டம் போட்டபடியே அனைத்துக் காரியங்கள்லேயும் வெற்றி தேடி வர்ற வாரங்க இது. தேவைக்கேற்ற பண வரவும் முக்கியமானவர்கள் ஆதரவும் கிட்டும். ஆபீசில் அனுகூலமான திருப்பங்கள் காத்திருக்கு. நல்ல விதமா பயன்படுத்திக்கிட்டா முன்னேற்றம் காணலாம். புதிய பொறுப்புகள், பதவி உயர்வு சிலருக்கு ஏற்படலாம். தொழில், வியாபாரத்தில பொருளாதார ஏற்ற இறக்கம் இருந்தாலும், தக்க சமயத்தில் எதிர்பார்த்த உதவி வந்து கை கொடுக்கும். கொடுக்கல் - வாங்கல், புதியவர்கள் பழக்கம் இரண்டிலும் எச்சரிக்கை அவசியம். குடும்பத்தில் மகிழ்ச்சி கூடும்.

**மீனம் :** புதுப்புது அறிமுகங்கள், தாரான பண வசதி, குடும்பத்தில் குதூகலம்னு மகிழ்ச்சியான வாரம். உங்க திறமையும், அறிவாற்றலும் சகல காரியங்களிலேயும் கை கொடுக்கும். ஆரோக்கிய மேன்மை, தெய்வீக ஈடுபாடு உண்டாகும். ஆபீசில் இது ஓர் அதிர்ஷ்டமான வாரம். மறைமுக நேர்முக எதிர்ப்புகள் மறைஞ்சு, புதிய திருப்பங்கள் நேரும். தொழில், வியாபாரத்தில் எதிர்பாராத தனலாபம், முன்னேற்றம் உண்டாகும். புதிய தொழில், கூட்டுத் தொழில் அனுகூலம் தரும். வரவேண்டிய பாக்கிகள் வந்து நெருக்கடி தீரும். குடும்பத்தில் ஒற்றுமையும், குதூகலம் கூடும். சுப காரிய முயற்சிகள் கூடி வரும். உறவினர், நண்பர் ஆதரவு கை கொடுக்கும்.

சிறுகதை

நன்னிலத்திலிருந்து பதினைந்து கிலோமீட்டர் தூரத்திலுள்ள அழகிய கிராமம், அதம்பார். பத்துப் பதினைந்து வீடுகள். சுற்றிலும் பச்சை வயல்கள். பாதி வீரப்ப பிள்ளைக்குச் சொந்தம்.

நாலு முழ வேட்டி, கதர்ச் சட்டை, பச்சைக் கரை போட்ட துண்டு, சந்தனப் பொட்டு. வெற்றிலைக் கறை படிந்த பற்கள். காலையில் டீக் கடையில் ஒரு டீ குடித்துவிட்டு, ஊர்க் கதையெல்லாம் பேசி, வயலைப் பார்க்க ஒரு சுற்று போனால் மதியச் சாப்பாட்டுக்குத்தான் வருவார். மீண்டும் மாலையில் ஒரு சுற்று! அந்திப்பொழுதில் பெருமாள் கோவில் வாசம்!. மைதானத்தில் விளையாடும் இளவட்டங்களை வம்பிழுத்து தமாஷ் செய்வார். யாரும் கோபித்துக் கொள்ள மாட்டார்கள். "அட போ.. பெரியப்பு..!" என்று கூறிவிட்டுச் செல்வார்கள். மாலை வீடு வந்ததும் ஆடு மாடுகளுக்கு புல், புண்ணாக்கு, தவிடு போட்டு அழகு பார்ப்பார்.

இப்படி அமைதியாக வாழ்வை ஓட்டிக் கொண்டிருந்த அந்த மனிதருக்கு ஒரு சின்ன ஆசை! அதை ஆசை என்று மட்டும் சொல்ல முடியாது. அதில் ஒரு பொதுநல நோக்கும் இருந்தது.

# நன்னிலம்

மூன்று மாதங்களுக்கு முன் தன் இளைய மகன் வேதகிரியைப் பார்க்கச் சென்னைக்குச் சென்றிருந்தார். சென்னை நகர வாழ்க்கை அவருக்கு வெறுப்பைத் தந்தது. குருவிக்கூடு மாதிரியான வீடுகள். எதற்கும் போட்டா போட்டி! நீண்ட வரிசை, கல்லையும் மண்ணையும் கூட விலை கொடுத்து வாங்க வேண்டிய நிலை. மருமகள் பாக்கியம் முருங்கைக்காய் சாம்பார் வைத்திருந்தபோதுகூட, "முருங்கைக்காய் யார் வீட்டிலிருந்து வந்தது பாக்கியம்?" எனக் கேட்டார்.

''ஏம் மாமா, நம்ம ஊருன்னு நெனச்சிங்களா? ஒரு வீட்ல மரம் வச்சிருந்தா அந்தத் தெருவுக்கே ஓசியில கொடுக்கிறதுக்கு. இது மார்க்கெட்ல வாங்கினது. ஒரு காய் மூணு ரூபா'' என்றாள் பாக்கியம்.

வீரப்பப் பிள்ளைக்கு விரக்திதான். தமது வீட்டுத் தோட்டத்தில் விளையும் பரங்கி, பூசணி எல்லாம் அண்டை வீடுகளுக்கு தூக்கிக் கொடுத்தது நினைவுக்கு வந்தது.

மூன்று நாட்கள் மகன்



வீட்டு விருந்தை முடித்துக் கொண்டு, சொந்த ஊருக்குத் திரும்பினார் பிள்ளை. பஸ்ஸில் ஏறி அமர்ந்ததிலிருந்து ஒரு விஷயம் மட்டும் நெருடலாகவே இருந்தது அவருக்கு. அந்த மன அழுத்தத்துடனே அதம்பாருக்கு வந்து சேர்ந்தார்.

அவரை விலை, துவரை விலை, எண்ணெய், தென்னை விலை எல்லாம் அவருக்கு ஒரு பொருட்டாகப்படவில்லை. அரிசி விலையைக் கேட்கும் பொழுதுதான் தலை சுற்றியது. 'இங்கு அரிசி, கிலோ பதினாறு ரூபாய்' என்று மருமகள் பாக்கியம் சொன்னபோதுதான் மிகவும் வேதனைப்பட்டார். இவ்வளவு இருக்காதே! இருக்கக் கூடாதே! அவர் மூளை கம்ப்யூட்டர் ரேஞ்சுக்கு கணக்குப் போட்டது. 'நெல் மூட்டை ஒன்று முந்நூறிலிருந்து நானூறு வரைக்கும்தான் நெல்



இராம.சுந்தர பாண்டியன்



"கேள்வி கேட்காத சீடர்களைத்தான் எனக்குப் பிடிக்கும்!"
"அது ஏன் குருவே அப்படி?"
- உ. ராஜாஜி

வியாபாரிகளுக்குக் கொடுக்கிறோம். அந்தக் கணக்குப்படி பார்த்தால், இவ்வளவு விலை விற்க வேண்டியதில்லை. அப்படியென்றால் நடப்பதென்ன? இடையில் வியாபாரிகளும் தரகர்களும் சாப்பிடுகிறார்கள். விவசாயிகளே நேரடியாக நெல்லை உடைத்து அரிசியாக்கி, மக்களுக்கு விநியோகம் செய்தால் எப்படி இருக்கும்? விலையும் குறையும். கலப்படமில்லாத தரமான அரிசியும் கிடைக்கும். விவசாயிகள், பொதுமக்கள் இரு தரப்பினருக்கும் லாபம். அதை நாமே செய்தால் என்ன?' என்பதுதான் பிள்ளையவர்களுக்கு உதித்த அந்த ஆசை!

மூத்த மகன் பெரியசாமியைக் கலந்து ஆலோசித்தார். அவரும் சரி என்று ஒப்புக் கொண்டார். அவர் பின்னே கூடவே இருந்து வயல்வெளிகளைக் கவனித்துக் கொள்வதால், தந்தையின் எண்ணத்துக்குக் குறுக்கே நிற்கவில்லை. துரிதகதியில் வேலைகள் முடுக்கி விடப்பட்டன. நெல் கேட்டு வந்த வியாபாரிகளெல்லாம் திருப்பி அனுப்பப்பட்டனர். நெல் மூட்டைகள் அவிக்கப்பட்டு அரவை ஆலைகளுக்குச் சென்று கொண்டிருந்தன.

நன்னிலம் பஸ் ஸ்டாண்டை ஒட்டிய பஜார் வீதியில் ஒரு கடையும் வாடகைக்குப் பிடித்தாயிற்று. கடையைப் பார்த்துக் கொள்ளவும், கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்ளவும், சென்னையிலிருந்த பெரியசாமியின் மகன் அருண் வரவழைக்கப்பட்டான். ப்ளஸ் டூ முடித்துவிட்டு, சென்னையில் பிஸினஸ் செய்து கொண்டிருந்த அருணுக்கு வர விருப்பமில்லை. பெரியவர்கள் கூப்பிடுகிறார்களே என்று வேண்டா வெறுப்பாகத்தான் வந்தான்.

'இனி வீரப்பப் பிள்ளையை டீக்கடையில் பார்க்க முடியாது. ஓசியில் டீ கிடைக்காது' என ஆதங்கப்பட்டனர் சிலர். "நல்லதுதானப்பா செய்யுறாரு. நெல்லுப் போட்டவனுக்கே ஆதாயம், அரிசி வாங்கிறவனுக்கும் ஆதாயம். பெரிய விஷயமில்லையா?" என்று புகழ்ந்தவர்களும் உண்டு.

ஒரு நல்ல நாளில் உதயமானது 'வீரப்பா அரிசிக்கடை.' புதிய கதர்ச் சட்டை மொட மொடக்க, கல்லாவில் அமர்ந்திருந்தார் வீரப்ப பிள்ளை. தொங்க விடப்பட்ட தராசு அருகே, ஒரு ஸ்டூல் சேரில் அமர்ந்திருந்தான் பேரன் அருண்.

சில மணி நேரம் கழித்து, கையில் பை சகிதமாக நடுத்தர வயதைக் கடந்த தம்பதியர் வந்தனர். அரிசி விலை கேட்டனர். "கிலோ பத்து ரூபாய் ஐம்பது காசு" என்றான் அருண். ஆச்சரியத்தோடு கொஞ்சம் அரிசியை எடுத்துப் பார்த்தார் வந்தவர். உடன் நின்ற மனைவி அவர் கையைத் தட்டிவிட்டு ஜாடை காட்டி, 'வாங்க போகலாம்' என்றாள். கணவனும் எதிர்ப்பின்றி உடன் திரும்பினார்.

"ஏங்க, இவ்வளவு குறைச்சலான ரேட்டுக்கு விக்கிறாங்கன்னா என்ன அர்த்தம்? புழுத்துப் போன ரேஷன் அரிசியை வாங்கி, பட்டை தீட்டி கொண்டு வந்து விக்கிறானுக" என்று அந்தப் பெண் கணவனது காதில் ஓதிக் கொண்டே எதிர்க் கடையை நோக்கி நடந்தாள்.

விக்கித்துப் போன வீரப்ப பிள்ளை நெல் வியாபாரிக்கு ஆள் அனுப்பினார். ○

சூலூர் பள்ளியில் இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்த போது 'பேசும் படம்', 'குண்டூசி' சினிமா பத்திரிகைகளை, நண்பர், ஆசிரியர் குமாரசாமி கொண்டு வந்து கொடுப்பார். அதில் வெளியாகியிருக்கும் நடிகர் - நடிகையர் க்ளோசப் படங்களைப் பார்த்து அப்படியே இந்தியன் இங்கில் 'லைன் டிராயிங்' வரைந்து நடிக நடிகையருக்கு, சென்னை விலாசத்துக்குத் தபாலில் அனுப்பி வைப்பேன்.

சிவாஜி, எம்.ஜி.ஆர், நாகையா, சாவித்திரி, ஜெமினி கணேஷ் போன்றோருக்கு அனுப்பியதில் ஜெமினி கணேஷ் மட்டும், அருமையான - 'பிரேம பாசம்' படத்தில் எடுத்த, கோட்-சூட்-டையுடனான 'க்ளோசப்' புகைப்படமும், எனது ஓவியக் கலைத் திறனைப் பாராட்டிக் கைப்பட கடிதமும் அனுப்பியிருந்தார்.

சிவாஜி, எம்.ஜி.ஆர் முகங்கள் ஒரு வகையான அழகு. ஜெமினி முகம் கொள்ளை அழகு. அலை அலையாகப் படிந்த சுருட்டைத் தலைமுடி... முத்துப் போல வரிசையான பற்கள்! இலேசாக வளைந்த கிளி மூக்கு, படித்த இளைஞர்களுக்கு 'மிஸ்ஸியம்மா', 'பிரேம பாசம்', 'பெண்ணின் பெருமை', 'மாயாபஜார்', 'பார்த்திபன் கனவு', படங்களைப் பார்த்துவிட்டு, 'டீசன்ட் ஆக்டர்னா ஜெமினிதான்' என்ற எண்ணம் வலுவாக ஏற்பட்டிருந்தது.

1966இல் 'கந்தன் கருணை' படம் உருவானது. அப்படத்தில் சிவனாக ஜெமினி மாமாவும், பார்வதியாக சாவித்திரியும் நடித்தார்கள். அந்தப் படப்பிடிப்பில் முதல் முதலாக அவரைச் சந்தித்தேன்.

'சரஸ்வதி சபதம்' படம் ஏ.பி.என். அவர்கள் தயாரித்து இயக்கிய படம். அதன் படப்பிடிப்பின் போது ஜெமினி மாமா, இயல்பாக இம்மியளவும் பந்தா இல்லாமல் என்னோடு பேசிப் பழகினார்.

'பொம்மை' என்ற ஓர் அற்புதமான சினிமாப் பத்திரிகையை நாகிரெட்டியார் 1966 ஜூலையில் வெளிக்கொணர்ந்தார். 'கல்கி'யின் எழுத்துக்களில் பெரிதும் மனத்தைப் பறி கொடுத்த எழுத்தாளர் ஸாரதி, பொம்மை இதழின் ஆசிரியர் பொறுப்பேற்றார்.

1966 அக்டோபர் இதழில், அழகிய புகைப்படங்களோடு எனது அறிமுகப் பேட்டி வெளியாகியிருந்தது. அதே பேட்டியில் என் முகத்தை நானே வரைந்த Self Portrait வெளியாகி இருந்தது.

எந்த ஓவியரும் ஒரு கணம் அசரும் அளவுக்கு அற்புதமாக வரைந்த ஓவியம். ஜெமினி மாமா அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு, நுட்பமாகத் தெரிந்த அழகை விவரித்துப் பாராட்டினார்.

அப்போதுதான், கிராமத்து இளைஞனாக இருந்த எனக்கு, அவர் வாழ்த்துக் கடிதமும் புகைப்படமும் அனுப்பிய விவரத்தைச் சொன்னேன்.

கொள்ளை அழகுடன், ஆண்களே காதலிக்கும் தோற்றத்துடனிருந்த அந்தப் புகைப்படத்தைப் பாதுகாத்து, வரைந்து வைத்திருப்பதையும் அவரிடம் சொன்னேன்.

"டேய் டேய்! சிவகுமாரா, 'அந்தப் படத்தை எனக்குக் குடுத்திடடா" என்று அன்றைக்கே கேட்க ஆரம்பித்தார்.

"உயிரோட நீங்க இருக்கும்போது, உயிரில்லாத அந்தப் படம் உங்களுக்கு எதுக்கு? எங்கிட்டேயே இருக்கட்டும்" என்று சாமார்த்தியமாக பதில் சொன்னேன்.

சமீபத்தில் அவருக்கு 80வது ஆண்டு நிறைவு விழா! சதாபிஷேகத்துக்கு அழைப்பு வந்தது. என் மகன் சூர்யா கோபித்துக் கொண்டான்.

"என்னப்பா! நீங்க! ஒரு மனுஷன் இந்தக் காலத்தில் 80 வருஷம் உயிரோடு இருக்கறதே இமாலய சாதனை! அவர்

இன்னும் பேரோட புகழோட, பேரம் பேத்திகளோட ஆரோக்கியமா இருக்காரு.

இப்பக்கூட அவரு பெயிண்டிங்கை நீங்க தரலேன்னா, அது வேஸ்ட்! சதாபிஷேக நாளிலே கொடுக்கறதுக்குச் சிறந்த பரிசு இதுதான்" என்றான்.

நானும் துணைவியும் ஓவியத்தைப் பார்சல் செய்து எடுத்துக் கொண்டு, கலைஞர் திருமண மண்டபத்தில் நடந்த விழாவுக்குப் போனோம். எனக்குப் பின்னால் கவிஞர் வைரமுத்து வந்தார்.

"நீங்கள் என்ன பரிசளிக்கப் போகிறீர்கள்?" என்று கேட்டார். "அதுதான் சஸ்பென்ஸ். ஜெமினி மாமாகிட்ட இதுக்குள்ளே என்ன இருக்குன்னு பார்சலைக் காட்டி கேட்பேன். சரியா பதில் சொன்னா, இதை அவருக்குப் பரிசாத் தருவேன். தப்பா சொன்னா, திரும்ப எடுத்திட்டுப் போயிருவேன்" என்றேன்.

"மாமா! இதுக்குள்ளே என்ன இருக்கு சொல்லுங்க" என்று கேட்டேன். "வேற என்ன! என் படந்தான்" என்றார்.

80 வயது கடந்தும் அவரது நினைவாற்றல்! என் ஓவியத்தின் மீது அவருக்கிருந்த பற்று சிலிர்க்க வைத்தது!

படத்தைப் பிரித்துக் காட்டினேன். அவர் கண்கள் பிரகாசமாயின. டாக்டர் கமலா செல்வராஜ் - ஜெமினியின் மூத்த மகள் - ஓவியத்தை வாங்கிப் பார்த்து, அப்படியே நெகிழ்ந்து போய் "எங்கப்பா மேல இவ்வளவு மரியாதை வச்சிருக்கீங்களா! ரொம்ப தேங்ஸ்! இந்தப் படம் இனிமே என் வீட்டில்தான் இருக்கப் போகுது" என்றார்.

"அடேய்! அங்கென்ன வேடிக்கை? கால்ல விழுடா, ஆசிர்வாதம் பண்றேன்" என்றார். நானும் துணைவியும் அவர் பாதங்களைத் தொட்டு வணங்கினோம்.

ஈ எறும்புக்குக்கூட தீங்கு நினைக்காத, எல்லோரையும் சமமாக மதித்து அன்பு காட்டுகின்ற, ஆயிரம் பிறை கண்ட அந்தக் கலைஞன் அட்சதை தூவி எங்களை ஆசிர்வதித்தார்...! அந்த ஓவியம்தான் நீங்கள் பார்ப்பது.

**- சிவகுமார் எழுதிய**
**'இது ராஜபாட்டை அல்ல'**
**நூலிலிருந்து...**



# ஜெமினி விரும்பிய ஓவியம்!



வெளியில் எப்போதும் பரபரப்பும் டென்ஷனுமாகவே இருக்கும் அரசியல் பிரபலங்கள், வீட்டில் எப்படிக் கூலாகிறார்கள்...?

**சௌம்யா அன்புமணி**

எங்கள் கல்யாணம் நடந்தபோது அவர் ஹவுஸ் சர்ஜன். சின்ன வயதிலேயே பொறுப்பு வந்துவிட்டதால், எந்த விஷயத்திலும் எச்சரிக்கையாகவே இருப்பார். வெளியில் நடந்த விஷயங்களை வீட்டுக்குள் கொண்டு வர மாட்டார். அதேபோல் வீட்டு விஷயங்களை யாரோடும் பகிர்ந்து கொள்ள மாட்டார். இரண்டு விஷயங்களுக்கும் நடுவில் அழுத்தமான கோடு உண்டு. வெளியில் நடந்த ஏதேனும் ஒரு விஷயத்தில் கொஞ்சம் அப்செட்டாக்கி விட்டால், வீட்டுக்கு வந்ததும் அமைதியை அமல்படுத்தி விடுவார். தொலைக்காட்சியில் கார் ரேஸ், கிரிக்கெட் பார்ப்பார்.





# மூட் அவுட் போச்சு;

என் தாத்தா, அப்பா என்று எல்லோரும் அரசியலில் இருந்ததால், அரசியல்வாதிகளின் மன ஓட்டதை என்னால் நன்றாகவே கணிக்க முடியும். அவர் டென்ஷன் ஆகி மன அழுத்தத்துடன் இருக்கும்போது, நானும் பேசாமல் இருந்து விடுவேன். சில சமயங்களில் அவர் யாரிடமும் பேசாமல் இருபத்து நான்கு மணி நேரம்கூட அமைதியாக இருந்து விடுவார். ஆனால், குழந்தைகளின் மலர்ந்த முகமும், குறும்பும், குதூகலமும் அவரை விரைவாகவே சகஜ நிலைக்குத் திரும்ப வைக்கும்.

**பாவலரசு (தொல். திருமாவளவனின் உதவியாளர்)**

அண்ணன் மூட் - அவுட்டாவது காலை வேளையில்தான். அவர் எழுந்திருக்கும்போதே அறையில் பத்துப் பதினைந்து பேர் இருப்பார்கள். அவரைக் காலைக் கடன்களை முடிக்க விடாமல், பல் தேய்க்க விடாமல், குளிக்க விடாமல், சுற்றி நின்று பிரச்னைகளைச் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். பலர் தொலைவிலிருந்து வந்திருக்கக் கூடும். ஆதலால் யாரையும் ஒன்றும் சொல்ல முடியாது. துவக்கத்தில் உற்சாகமாக கேட்டுக் கொண்டு வருவார் அண்ணன். பிறகு கொஞ்சம் அமைதியாகி

விடுவார். அந்தச் சூழலை நாங்கள் புரிந்து கொண்டு, தோழர்களிடம் நயமாகச் சொல்லி, நிலைமையைச் சமாளிப்போம். சிறு உடற்பயிற்சிக்குப் பிறகு, குளிர்ந்த நீரில் குளித்துவிட்டு வருவார். அப்புறம் டென்ஷனாவது... ஒண்ணாவது...? செம உற்சாகமாகி விடுவார். சில சமயங்களில் எண்ணங்களை எழுத முடியாமல் பணி அசத்துகிறதே என்று அவர் கவலைப்படும்போது, நிகழ்ச்சிகளை கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்து நேரத்தை உண்டாக்குவோம். எழுதி முடித்த பின் அண்ணன் புத்துணர்ச்சியோடு புறப்பட்டு விடுவார். ('அண்ணன் சீக்கிரம் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்' என்பதே அவரது தோழர்களின் விருப்பம்.)



**தமிழ்ச்செல்வி வசந்தகுமார்:**

**வி**யாபாரத்தைத் துவக்கியபோது சில காலம் நானும் அவருக்கு உதவியாக இருந்தேன். இப்போது கடவுள் அருளால் வியாபாரம் வளர்ந்திருக்கிறது. எல்லாவற்றையும் கவனிக்க ஆட்கள் இருக்கிறார்கள். ஆரம்பத்தில் பிரச்னைகள் ஏதேனும் வந்தால், கலந்து பேசி தீர்வு காண்போம். மன அழுத்தம் வராமல் பிரச்னைகளைத் தீர்க்க முயற்சி செய்வோம். காமராஜ் மீதுள்ள பற்று காரணமாகவும், நேரு குடும்பத்தின் மீது உள்ள மரியாதை காரணமாகவும் இவர் தீவிர அரசியலில்



# உற்சாகமாச்சு!

குதித்தபோது எனக்கு இலேசான பயம் இருந்தது. 'குடும்பத்தைக் கவனிக்க நேரம் இருக்காது, வேளா வேளைக்குச் சாப்பிட முடியாதே' என்று பல கவலைகள். ஆனால் இயல்பாகவே நகைச்சுவை உணர்வு கொண்டவராதலால், பிரச்னைகள் அழுத்தும்போது தொலைக்காட்சியில் காமெடிக் காட்சிகளைப் போட்டு ரஸிப்பார். அவர் வீட்டுக்குள் நுழைந்து அமைதியாக இருக்கும்போதே, 'ஏதோ குழப்பத்தில் இருக்கிறார்' என்பதைப் புரிந்து கொண்டு, நாங்கள் எதுவும் பேச மாட்டோம். கடந்த பாராளுமன்றத் தேர்தலின்போது, இவருக்கு நெல்லை பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட வாய்ப்புக் கிடைப்பதாக இருந்தது. ஆனால் இறுதியில் அது நழுவிப் போனது. அந்தச் சமயத்திலும் அவர் மிக இயல்பாக, நகைச்சுவையுடன் விஷயங்களை எடுத்துக் கொண்ட விதம், சூப்பர்!

- ஸ்ரீநி

படங்கள்: ராஜன்

# கலகல தொடர்-12

ஜெனட்டின் வீட்டுக்கு சுகந்தா வந்து சேர்ந்து, விளையாட்டுப் போல பத்து நாட்களாகி விட்டிருந்தன.

எதுவும் புரியாவிட்டாலும் ஒன்று மட்டும் அவளுக்குப் புரிந்தது.

'இந்த வெள்ளைக்காரன், தன் பெண்டாட்டிக்கு, ஆயா வேலை பார்க்க, நம்மைலாவிட்டு வந்துட்டான்..'

'பெண்டாட்டி, ரொம்ப நாள் கழிச்சி உண்டாகியிருக்காப்பல இருக்கு. ஒத்தாசைக்கு அம்மாவையோ, மாமியாரையோ கொண்டு வந்து வச்சுக்கப் படாதோ... நான்தானா கிடைச்சேன்...?'

'என் பொண்ணு என்னமா வேதனைப்படறாளோ... சாதாரணமா - உப்புப் பெறாத விஷயத்துக்கெல்லாமே அவ, அகமுடையான் கிட்ட கோவிச்சுப்பா. இப்ப கேட்கவே வேணாம். வயித்துல புள்ளையையும் வச்சிண்டு, சதிராடியிருப்பா...''

'அய்யோ... அங்கே அவர் என்ன பாடு படறாரோ... பக்கத்துல இருக்கற கோவிலுக்குக்கூட தனியே போகவிடமாட்டார். உனக்கென்னடி, சுவாமியத்தானே பார்க்கணும். புருஷன் மூஞ்சியில இல்லாத சாமியா? காலம்பற ஷேவ் பண்ணிக்க லேட்டாறப்ப ருத்ர தாண்டவம் ஆடுவேனே... அதுதான் சிவதாண்டவம்... மத்தியானம் உட்கார்ந்து உன் கை வேலையப் பிடுங்கி செய்யறப்ப, நான் பிரும்மாவா இருக்கேன். ராத்திரி நீ வெத்தலை மடிச்சுக் கொடுக்க, நான் ஹாய்யா உன் மடியில காலை வச்சுண்டு படுக்கறேனே... அப்ப மகாவிஷ்ணுவும் நான் தாண்டீயின்னு... பாவம்... காலைச் சுத்திச் சுத்தி வருவார்..'

'நானும் எத்தனையோ பேசியிருக்கேன். ஏன் மத்த சாமியெல்லாத்தையும் விட்டுட்டேன். எந்தக் கடங்காரனாவது என் கிட்டப் பேசிட்டா, மூஞ்சிய இஞ்சி தின்ன எதுவோ மாதிரி வச்சுப்பேளே. அப்ப வெண்ணையச் சாத்தி, வடை மாலை போட்டா அச்சு ராமதூதன்தான்னு...'

மனசுக்குள் என்னென்னவோ எண்ண அலைகள்... நடுவே, ஜெனட்டோ, ஸ்டீஃபனோ கண்ணில் படாத நேரத்தில், 'விருட்'டென ஓடி, தொலைபேசியில் ப்ரியாவிடம் பேசி விடலாமோ என்று கூடத் தோன்றும்.

ஒரு முறை முயற்சித்தும் பார்த்தாள்.

ஸ்டீபன் எங்கிருந்தோ எட்டிப் பார்த்தான்.

''இட்ஸ் லாக்ட்'' என்றான்.

ஜெனட் இவ



# மாம் ஃப்ரம் இண்டியா

ளையே பரிதாபமாய்ப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். நடுநடுவே சுகந்தாவுக்கு அமெரிக்க சமையலறையை எப்படி உபயோகிப்பது என்பது பற்றி, ஒவ்வொரு ஆங்கில வார்த்தையாக நிறுத்தி, நிறுத்திச் சொல்லிக் கொடுத்தாள்.

"திஸ் இஸ் லைட்டர்... ஃபார் ஸ்டவ்.."

"ஐ நோ. எங்க வீட்டுலேயும் இருக்கு."

"வாட் யூ நோ?"

"ஐ நோ லைட்டர். ரிமோட்டர், ஸ்வெட்டர், ரெகுலேட்டர், எஸ்கலேட்டர். என் ஹஸ்பெண்ட் சொல்லிக் கொடுத்திருக்கார்."

சுகந்தா, கன்னத்தில் வழியும் கண்ணீரை, புறங்கையால் தேய்த்தபடி கூற...

"ஹவ் நைஸ்.. ஐ லைக் யூ வெரிமச் மாம்.."

ஜேனட், அவளை அப்படியே இரு கைகளாலும் இறுக அணைத்தாள்.

ஸ்டீஃபன், இந்த அருமையான காட்சியை தனது வீடியோ கேமிராவில் சுட்டுத் தள்ளினான்.

"என்னை எப்போ ப்ரியம்வதா கிட்ட கொண்டு போய் சேர்ப்பீங்க..."

இத்தனை நீளமாய் ஆங்கிலத்தில் பேச வராத காரணத்தினால், சுகந்தா, புடைவைத் தலைப்பை வரிந்து கட்டிக் கொண்டு, பத்மா சுப்பிரமண்யம் மாதிரி அபிநயித்துக் காட்டினாள்.

கையில் பிரியம்வதாவின் போட்டோவை வைத்துக் கொண்டு அவள் கேட்க, அதையும் விடாமல் கேமராவில் சுட்டான் ஸ்டீஃபன். பிறகுதான் பதிலளித்தான்.

"ஜஸ்ட் எ மன்த்.. நவ் ஷி இஸ் எய்ட் மன்த் கேரியிங்.. ஜேனட் ஃபர்ஸ்ட்.. ப்ரியா நெக்ஸ்ட்.."

"பிரசவத்துக்கு முன்னால வாய்க்கு வேண்டியதை செஞ்சுப்



அனுராதா ரமணன்

# பிடித்தவை!



ஓவியர் மணியத்தின் பரம விசிறி நான்! 'கல்கி'லே 'பொன்னியின் செல்வனு'க்கு அவர் வரைஞ்ச ஓவியங்களைப் பார்த்து வரைஞ்சு, பிராக்டீஸ் பண்ணியிருக்கேன். எழுத்துத் துறையிலே, ஜ.ரா.சு. விசிறி நான். அப்புசாமி - சீதாப் பாட்டி கதைகள்னா விருப்பமா படிப்பேன்.

**-ஓவியர் செல்லப்பன்**

போடத்தானேடா வந்தேன் இங்கே. எங்காத்துக்காரரை கூடத் தனியா விட்டுட்டு.."

சுகந்தா, தனக்கு ஆத்திரம் ஏற்படும் போதெல்லாம், தமிழிலேயே சகட்டு மேனிக்கு விளாசினாள்.

அவ்வப்பொழுது இவர்களுக்குத்தான் தமிழ் தெரியாதே என்கிற தைரியத்தில் ஸ்டீஃபனை 'கடங்காரா' என்றும், ஜேனட்டை 'பூதம், பிசாசு' என்றும் இரைந்தே திட்டுவாள்.

இது மிகச் சரளமாய் ஜேனட், ஸ்டீஃபனிடமும் படிந்து விட்டது.

இருவருக்கிடையே ரொம்பவும் காதல் முற்றிப் போகும் போது, ஜேனட் தன் கணவனை, 'ஓ மை ஸ்வீட் கடன்காரா' என்றும், அவன் தன் மனைவியைத் தோளில் சாய்த்தபடி 'பூதம்.. மை டார்லிங். பிசாசு பேபி' என்றும் கொஞ்சிக் கொள்ள...

சுகந்தா சத்தமாய் சஷ்டி கவசம் சொல்லியபடி, கண்களை இறுக மூடிக் கொள்வாள்.

'ஊர் உலகத்துல என்னைத் தேட் மாட்டாளோ...'

"ஒரு ஹிந்து, தினத் தந்தி எதுவுமில்லாம என்ன ஊருடியம்மா இது?"

தொலைக்காட்சியில் சினிமா மட்டுமே ஓடியது. இசைத்தட்டுக்களில் மேற்கத்திய சங்கீதமே ஒலித்தது.

அதிலும் ஜேனட்டுக்கு மிகவும் பிடித்த பிரெயின் ஆடம்ஸின் 'ஹியர் ஐயாம் - திஸ் இஸ் மீ' என்ற பாடலே திரும்பத் திரும்ப ஒலித்ததால் - சுகந்தா, அந்தப்பாட்டை, இசைத் தட்டோடு சேர்ந்து முனகும் அளவுக்குத் தேறி விட்டனர்

ஜேனட், தன் கணவனிடம் தீர்மானமாய்ச் சொல்லி விட்டாள்.

"நான் சொன்னா நீ கேட்கப் போறதில்லே. இதுக்கான தண்டனைய நினைச்சுப் பார்த்தாலே எனக்கு மயக்கம் வர்றது. மாட்டினே... தொலைஞ்சே.. ஆனா ஒண்ணு..."

"சொல்லு மை டியர் பிசாசு.."

"இந்த 'மாம்' இங்கே இருக்கற வரைக்கும் கிச்சனுக்குள்ள நான் வெஜ் வரக் கூடாது."

"அதெப்படி... அவங்க சாப்பிடாட்டி போகட்டும். எனக்கு அப்படி இருக்க முடியாது."

"ஓஹ். உனக்கு எப்படி சொல்லிப் புரியவைக்கறதுன்னு தெரியலே. இவங்க இங்கே இருக்கணும்னா, இன்டியன் ஸ்டோருக்குப் போய், வெஜிடேரியன் கிச்சனுக்கு வேண்டிய காய்கறி, பருப்பு இதெல்லாம் வாங்கிட்டு வா..."

"அதெப்படி எனக்குத் தெரியும்?"

"அப்ப அந்தம்மாவையும் அழைச்சிட்டுப் போ"

"என்ன உளர்றே. என்னை சீக்கிரமாவே போலீஸ்லே பிடிச்சுக் கொடுக்கறதுதான் உன் திட்டமா?"

"நீ ஜெயிலுக்குப் போயிட்டா, நான் மட்டும் இங்கே உட்கார்ந்து காபி

குடிச்சிட்டிருப்பேனா? எனக்குத் தெரியாது. ஏதாவது செஞ்சு, இண்டியன் வெஜிடேரியன் ஃபுட்டுக்கு ஏற்பாடு செய்."

இதன் விளைவுதான்.

ஸ்டீபன், சுகந்தாவை அப்படியே அமெரிக்க நாகரிகப் பெண்மணியாக மாற்றினான்.

சுகந்தாவோ, ஸ்டீஃபனின் கைகூட தன்மேல் படக்கூடாது எனப் பிடிவாதம் பிடித்தாள்.

பேண்ட் அணிந்து, டீ ஷர்ட் போட்டு, அதன் மீது ஸ்வெட்டர், அதன்மீது கனமான ஓவர் கோட் எல்லாவற்றையும் மாட்டி, தலைமுடியைச் சுருட்டி, தொப்பிக்குள் மறைத்து, முகத்தில் ஏகப்பட்ட க்ரீம்களைக் குழைத்துப் பூசி, அரை இன்ச்சுக்குப் பவுடர் ஒற்றி, லிப்ஸ்டிக்கை அழுத்தமாய்ப் போட்டு...

"வாவ்..."

ஜெனட், ஸ்டீஃபனின் சாமர்த்தியத்தைப் பார்த்து அதிசயித்துக் கன்னத்தில் கை வைத்தாள்.

சுகந்தா, பெரிய கண்ணாடியில் தன்னைப் பார்த்து விட்டு, பயந்து, மிரண்டு உட்கார்ந்து விட்டாள்.

"இந்தக் கோலத்தோட என்னை எங்கே அழைச்சுண்டுப் போகப் போறே?"

"ஷாப்பிங்.."

"அந்தக் கருமாந்திரத்தை எல்லாம் நீங்களே செய்யக் கூடாதா...?"

இவள் என்ன சொல்கிறாள் என்றே புரியாத ஜெனட், அவளைப் பிரியத்துடன் சேர்த்து அணைத்துக் கொண்டே




ஸ்டீபனிடம் சொன்னாள்.

"ஸ்டீஃபன், மாம் ஏதோ கருமாந்திரம்னு சொல்றாங்க. மறக்காம அதையும் வாங்கணும். ப்ளீஸ் நோட் இட்."

"ஓ.. ஷ்யூர்."

அவன், தனது பாக்கெட் நோட்டில் கர்மசிரத்தையாகக் குறித்துக் கொண்டான்.

**கா**ரில் ஜெனட்டும், சுகந்தாவும் பின் ஸீட்டில் அமர, ஸ்டீஃபன் காரை அருகில் உள்ள ஒரு இந்தியன் குரோஸரீஸ்ஸுக்கு செலுத்த...

சுகந்தாவுக்கு புது பேண்ட் இம்சித்தது. ஓவர் கோட்டை இழுத்து இழுத்து விட்டுக் கொண்டாள்.

ஜெனட் அவளை ஒட்டி நடக்க, இந்தப் பக்கம் ஸ்டீஃபன். முதலிலேயே சொல்லி விட்டாள்.

"தப்பிக்கவோ இல்லே, தப்புவிக்கவோ பார்த்தீங்கன்னா, கொலை விழும்!"

சுகந்தாவின் முதுகில் துப்பாக்கியின் முனை உறுத்த, அவள் யார் முகத்தையும் ஏறிட்டுக் கூடப் பார்க்காமல், அரிசி, துவரம்பருப்பு, பச்சைப் பருப்பு, புளி, மிளகாய் வற்றல் என்று சுட்டிக்காட்ட, ஜெனட் அத்தனையையும் தள்ளு வண்டியில் நிரப்பிக் கொண்டே வேகமாய் நகர்ந்தாள்.

"அப்படியே புடலங்காய். கத்திரிக்காய் தேங்காய்.. வேறென்ன?"

எங்கேயோ தேமதுரத் தமிழ் ஓசை கேட்டு தன்னை மறந்து ஒரு கணம் திரும்பினாள் சுகந்தா.

யாரோ ஒரு இந்தியப் பெண்மணி, தன் கணவர், குழந்தையுடன்.

அந்த நொடிப் பொழுதில் சுகந்தாவைப் பார்த்த அந்தப் பெண், தன் கண





**மை**க்கேல் ஜாக்ஸனின் தீவிர ரசிகை நான். இயக்குநர்களில் ஃபாசில்! 'பூவே பூச்சூட வா', 'வருஷம் 16' என அவரது படங்கள் ஒவ்வொன்றும் மணி மணியாக இருக்கும். அவருடைய 'காதலுக்கு மரியாதை' படம் எனக்கு இளவரசி கிரீடத்தைக் கொடுத்ததாச்சே!

– ஷாலினி அஜித்

வரிடம் தமிழில் கூறினாள்.

"வர வர அமெரிக்காப் பொம்மனாட்டியெல்லாம் கூட வைர பேஸரி போட்டுக்க ஆரம்பிச்சுட்டா பாருங்கோ.."

"எங்கே...?"

அவ்வளவுதான்! ஸ்டீஃபன், சுகந்தாவை அழைத்துக் கொண்டு காருக்குப் போய் விட்டான்.

ஜேனட், வாங்கிய பொருள்களுக்கு கார்டை நீட்டி பணத்தைச் செலுத்தி விட்டு, ஓட்டமும் நடையுமாகக் காருக்கு, தள்ளு வண்டியில் சாமான்களைத் தள்ளி வந்தாள்.

காரில் ஏறி உட்கார்ந்து, கார் கிளம்பிய பிறகும் மூச்சிறைத்தது அவளுக்கு. கண்களில் நீர் பளபளத்தது.

"மாம். எங்களை மன்னித்து விடுங்கள். என்னால் உங்களுக்கு ரொம்பவும் கஷ்டம்."

இப்படிக் கூறியபடி, சுகந்தாவின் கரத்தைப் பற்றி முத்தமிட்டாள்.

சுகந்தா பாகாய் உருகிவிட்டாள்.

"ஐயோ பாவம். கவனிச்சுக்க ஒரு அம்மா இல்லாம... ரொம்பத்தான் திண்டாடறா..."

அந்தத் தாயுள்ளம் மெழுகாய் இளகியது. அந்தக் கணமே, 'இவளுடைய பிரசவத்துக்குப் பிறகு மகளிடம் போனால் தான் என்ன' என்கிற எண்ணம் எழுந்து விட்டது.

பரமேஸ்வரனை நினைத்துத் தான் வருத்தப்பட்டாள் அவள்.

'ஒரு காக்கா கழுத்துலேயாவது, நான் சௌக்யமா இருக்கற சமாசாரத்தை எழுதிக் கட்டி அனுப்பலாம்னு பார்த்தா... மருந்துக்குக் கூட காக்காயக் காணோமே!

**கா**ரிலிருந்து இறங்கும் போதே ஜேனட் இடுப்பைப் பிடித்துக் கொண்டாள்.

"என்ன, வலிக்கிறதா..?"

"எஸ்..."

"அப்படியே ஹாஸ்பிடலுக்குப் போயிடலாமா..?"

சுகந்தா அவர்கள் இருவரது முகங்களையும் மாறி, மாறிப் பார்த்தாள்.

'பெயின், ஹாஸ்பிடல்' இந்த இரண்டு வார்த்தைகள் கூடப் புரியாத அசடில்லையே அவள்.

மெதுவாக ஜேனட்டின் வயிற்றைத் தொட்டுப் பார்த்தாள்.

"இன்னும் தலை இறங்கவே இல்லை."

"வாட்?"

"தலை... தலை... ஹெட், புரியலையா. மரமண்டைகளா. இது நாட் லேபர் பெயின். ஃபால்ஸ் பெயின். கொஞ்சம் போல சிரசுக் கஷாயம் போட்டுத் தர்றேன். அமர்க்களம் பண்ணாமக் குடி.... வா.."

அவள், ஜேனட்டை வீட்டுக்குள் அழைத்துப் போய், தன் கைப்பையிலிருந்து திருநீற்றுப் பொட்டலத்தை எடுத்து, கொஞ்சம் போல் இட்டு விட்டாள்.

"தாயுமானவ சுவாமி பிரசாதம்... டோன்ட் ஒர்ரீ... ஐயாம் வித் யூ..."

ஸ்டீஃபன் 'ஓ'வென அழ, ஜேனட்டும் சேர்ந்து கொண்டாள்.

(தொடரும்)



* முகமலர்ந்த வரவேற்பு

# வழி நடத்த வாங்க!

**சென்னை பாரதிய வித்யாபவனில் கடந்த மார்ச் 12 அன்று நடைபெற்ற கல்கி சதாசிவம் நினைவு விருது வழங்கும் விழாவில் பி.கே.கிருஷ்ணராஜ் வாணவராயர் 'நவீன சமுதாயத்தில் மீடியாவின் பங்கு' என்ற தலைப்பில் உரையாற்றினார். நிகழ்ச்சித் தொகுப்பு :**

'நவீன சமுதாயத்தில் மீடியாவின் பங்கு' என்பது இன்றைய தலைப்பு... நவீன சமுதாயம் என்பது, அறிவியல் பார்வை கொண்ட ஒரு முற்போக்கு சமுதாயமாக இருக்க வேண்டும். ஆனால் இன்று நவீன சமுதாயம் எப்படி இருக்கிறது? மேற்கத்திய நுகர்வோர் கலாசாரத்தின் பகட்டுக்கும் பளபளப்புக்கும் அடிமையாகி, தனக்கே உரித்தான இயல்பான பண்டைய கலாசாரத்தையும் பண்பாட்டையும் தொலைத்துவிட்டு, எந்த ஓர் உன்னத லட்சியமோ, குறிக்கோளோ இல்லாமல் வலுவிழந்து, குழம்பிப் போய் இருக்கிறது. இப்படிப்பட்ட நவீன சமுதாயத்தில் மீடியாவின் பங்கு என்ன?

எந்த விஷயத்திலும் ஒரு பொதுக் (மக்கள்) கருத்தை உருவாக்க வேண்டும். தேச நிர்மாணப் பணிக்கு, மனித வளத்தையும், சக்தியையும் திரட்டித் தர வேண்டியது பத்திரிகைகளின் பொறுப்பு. இதைச் செம்மையாகச் செய்ய வேண்டுமானால்; பத்திரிகைகள் நடுநிலையோடு, சுதந்திரமாக, நேர்மையாக இருக்கவேண்டும்.

ஒரு பத்திரிகை நடுநிலையோடு, நேர்மையாக, சுதந்திரமாகச் செயல்படுவதற்குத் தடையாக இருப்பவை என்னென்ன? முதலாவது வியாபார ரீதியான நிர்ப்பந்தங்கள்.

எங்கள் ஆடைத் தொழிலில் நூல் வாங்கி, துணியாக்கி, மதிப்புக் கூட்டி, ஏற்றுமதி செய்



* வாணவராயர்

கிறோம். ஆனால் நியூஸ் பிரின்ட் வாங்கி, பத்திரிகை அச்சிட்டு விற்றால், நஷ்டம் தான் வரும். அந்த நஷ்டத்தைச் சமாளித்து லாபம் பெற வேண்டுமானால், விளம்பரங்கள் தேவை. விளம்பரங்கள் எப்போது கிடைக்கும்? பத்திரிகையின் சர்குலேஷன் அதிகமாக இருந்தால்தான். மக்களின் ரசனைக்கு ஏற்ப விஷயங்களைத் தர முன்வந்தால்தான் விற்பனை அதிகரிக்கிறது. ஆக, பத்திரிகை அதிபர்கள் அதை விரும்பினாலும், விரும்பா விட்டாலும் 'பரபரப்பு' தேவைப்படுகிறது, கவர்ச்சி தேவைப்படுகிறது.

இது ஒரு பக்கம் என்றால், இன்னொரு பக்கம், நினைத்ததை சுதந்திரமாய் எழுத முடியாதபடி அரசியல் நெருக்கடிகள். அடிமை இந்தியாவில் இருந்த நெஞ்சுரம், நமக்குச் சுதந்திர இந்தியாவில் இல்லை. காவிரிப் பிரச்னை முதல் காஷ்மீர் பிரச்னை வரை, எதையும் தீர்க்க முடியாத சமுதாயமாக நாம் இருக்கிறோம். இன்று இந்தியா இருப்பது அதன் பாராளுமன்றத்தில் இல்லை, நீதி மன்றத்தில்.

பல நிர்ப்பந்தங்களுக்கிடையேயும் மீடியா, சமுதாயப் பொறுப்போடு இயங்கித்தான் ஆக வேண்டும். ஒரு செய்தியை, எந்த நோக்கத்தில், எப்படி வழங்க வேண்டும் என்ற நெறிமுறை இருக்கிறது. கால மாற்றம் என்று சொல்லி, இதிலிருந்து யாரும் தப்பித்துக் கொள்ள முடியாது.

இந்த நேரத்தில், 1954ல் தாம் மறைவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பு, கல்கி, சென்னையில் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் ஆற்றிய உரையிலிருந்து ஒரு பகுதியைக் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாக இருக்கும் :

"பல சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டுவரப்பட்ட பின்னரும், நாட்டில் பல சீர்கேடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. இந்தக் கேடுகளை ஒழிப்பதையே, எழுத்தாளர்கள் தங்கள் எழுத்தின் லட்சியமாகக் கொள்ள வேண்டும். அதற்கும்கூட நேர்மையான, நியாயமான வழியிலேயே எழுத்தைக் கையாள வேண்டும். ஒரு தவறின் மூலமாக, இன்னொரு தவறைச் சரி செய்துவிட முடியாது. நேர்மையும், பரிவும், பண்பாடும் எழுத்தில் வெளிப்பட வேண்டும்.

எழுதுவதற்கு முன்பு, தான் எழுதப் போவது மக்களை ஒன்று படுத்துமா? பிளவு படுத்துமா? என்று ஓர் எழுத்தாளன் சிந்திக்க வேண்டும். அன்பு, மனித நேயம், நியாயம், நேர்மை ஆகியவற்றை எழுத்தில் புகுத்தி மக்களை மேம்படுத்த வேண்டும். இது குறித்து கவலைப்படாமல் எழுதுபவர்களை, இந்த சமுதாயத்தில் பெருங்குற்றம் செய்தவர்களாகவே கருத வேண்டும்."

1954ல் கல்கி கிருஷ்ணமூர்த்தி சொன்ன கருத்து, இன்றைக்கும் மிகப் பொருத்தமாக இருக்கிறதல்லவா?

**1780** ஜனவரி 29 அன்று வெளியான 'பெங்கால் கெஸட்'தான் இந்தியாவின் முதல் பத்திரிகை. இன்று இந்தியப் பத்திரிகை உலகத்துக்கு வயது 225. இந்தக் கால கட்டத்தில் இந்தியாவில் நிகழ்ந்த மாறுதல்கள் ஏராளம். குறிப்பாக, நாம் சுதந்திரமடைந்த பின் கண்ட மாற்றங்கள் பல. நாம் சுதந்திரமடைந்தபோது, மேற்கத்திய நாடுகள் 'பல்வேறு வேற்றுமைகள் கொண்ட இந்தியா வெகுகாலம் ஒன்றுபட்டு இருக்காது' என்றார்கள். ஆனால், அதனைப் பொய்யாக்கி, வேற்றுமைகளில் ஒற்றுமை கண்டு, பல்வேறு முன்னேற்றங்கள் கண்டிருக்கிறோம். இதில் பத்திரிகைகளின் பங்கு சிறப்பானது. ஓரிரண்டு விதிவிலக்குகள் இருந்தாலும், பெரும்பாலும், பத்திரிகைகளின் பணி, பாராட்டும்படியாகவே அமைந்துள்ளது.

இன்று நம் நாட்டின் முன் இருக்கும் சவால், எப்படி இந்திய மக்களை சிந்திக்க வைப்பது? எப்படிச் செயல்பட வைப்பது என்பதுதான். மக்கள் சிந்திக்க, செயல்படத் தொடங்கும் தினம், இந்தியா ஒரு 'சூப்பர் பவர்' ஆகிவிடும். ஆனால் நாம், இன்று பார்ப்பது என்ன? படித்தவர்கள் மத்தியில் அலட்சியப் போக்கு! எது நடந்தால் நமக்கென்ன என்ற மனப்பான்மை. தேசத்தின் இன்றைய அத்தனை அவலங்களுக்கும் காரணம் நாம்தான். கிராமங்களில் வசிக்கும்



"சொன்னா நம்புங்க, கூலிப்படையை ஏற்பாடு செய்வதற்கெல்லாம், பேங்க்ல லோன் கொடுக்க மாட்டாங்க"

- செங்குன்றம் 'சபா'

பாமர மக்கள் இல்லை.

படித்தவர்கள் மத்தியில் கொஞ்சம் பொறுப்புணர்ச்சியும், பாமரர்கள் மத்தியில் கொஞ்சம் விழிப்புணர்ச்சியும் இந்த பத்திரிகைகளால் ஏற்படுமேயானால், அதுவே போதும்! கலாசாரத்தை மறந்துவிட்டு, கம்ப்யூட்டரை வைத்துக் கொண்டு நாம் சாதிக்கப் போவது என்ன?

யார் கையில் பத்திரிகை இருக்கிறது என்பதைப் பொருத்ததே பத்திரிகை தர்மம். விழா நடக்கும் இன்றைய தினம் (12.04.05) ஒரு மகத்தான நாள். இன்றைக்கு எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு எழுபத்தி எட்டு சத்யாக்கிரகிகளுடன், 1930ல், சபர்மதியிலிருந்து புறப்பட்டு 385 கி.மீ. தூரத்தை, இருபத்தி ஐந்து நாட்களில் நடந்து தண்டி வரை சென்ற உப்பு சத்தியாக்கிரகத்தின் தொடக்க நாள். இன்றைய தினம், சதாசிவம் பற்றிப் பேச எனக்கு வாய்ப்புக் கிடைத்ததை, தற்செயலான ஒன்றாக நான் கருதவில்லை. இது தெய்வ சித்தம் என்றே நினைக்கிறேன்.

உப்பு சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப் போவதாக, காந்திஜி அனுப்பிய தந்தியை, பிரிட்டிஷ் வைஸ்ராய், குப்பைத் தொட்டியில் கசக்கிப் போட்டுவிட்டார். ஆனால் காந்திஜி அதைப் பொருட்படுத்தவில்லை. ஒரு சிலருடன் ஆரம்பித்த யாத்திரை, இறுதியாக தண்டியை அடைந்தபோது, கடலெனத் திரண்டிருந்தனர் மக்கள். மகாத்மா காந்தி, குனிந்து ஒரு பிடி உப்பை அள்ளிய காட்சியைப் பார்த்துவிட்டு, லண்டன் டைம்ஸ் பத்திரிகையின் நிருபர், லண்டனுக்குத் தந்தி மூலம் செய்தி அனுப்பினார். அதிலே அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'இந்தக் கிழவர் குனிந்து ஒரு பிடி உப்பை அள்ளியபோது, தெற்கு ஆசியா முழுவதிலும் பூமி சிலிர்த்ததை என்னால் உணர முடிந்தது. சத்தியம், அஹிம்சையின் ஆற்றல் உறுதியாயிற்று.' இப்படிப்பட்ட நிருபர்கள் அன்று இருந்திருக்கிறார்கள்.

இன்று மீடியாவில் எதிர்மறையான விஷயங்களுக்குத் தரப்படும் முக்கியத்துவம் குறைக்கப்படவேண்டும். நல்ல விஷயங்களுக்கு முக்கியத்துவம் தர வேண்டும். வெற்றிகளைப் பறை சாற்றுங்கள். தோல்விகளைப் பெரிது படுத்தாதீர்கள். இளைஞர்களிடையில் தேசப்பற்றை, சமுதாய உணர்வை ஏற்படுத்துங்கள். தேசத்தின் மனசாட்சியாக இருந்து வழிநடத்துங்கள். பத்திரிகை வெற்றி பெறுவது முக்கியம். பத்திரிகை தர்மம் நிலைப்பதும் முக்கியம்.



• கல்கி சேர்மன் வி.வைத்யநாதன் வாணவராயரை கௌரவித்தார்

ஒருமுறை சுவாமி தயானந்த சரஸ்வதியிடம், ஒருவர் 'தர்மத்தின் பக்கம் நிற்பதனால் என்ன பயன்?" என்று கேட்டாராம். அதற்கு அவர் "தர்மத்தின் பக்கம் நிற்பதனால் உனக்கு ஒரு ஆதாயமும் இல்லை, ஆனால் ஏகப்பட்ட இழப்புகள் நிச்சயம்" என்று பதில் சொன்னாராம்.

"அப்படியென்றால், ஏன் தர்மத்தின் பக்கம் நிற்க வேண்டும்?" என்று கேட்க, சுவாமியின் பதில் : "தர்மத்தின் பக்கம் நின்ற மனநிறைவு கிடைக்குமே!"

ஆக நிறைவு என்பது வேறு; வெற்றி என்பது வேறு. வெற்றி பெற்றவர்கள் எல்லோரும் திருப்தியடைந்துவிடுவதில்லை. ஆனால் மனத்திருப்தி என்பதுதான் மிகப் பெரிய வெற்றி. அந்தத் திருப்தியை - மனநிறைவைத் தராத வெற்றியில் பயனில்லை என்பதைத்தான் கல்கி சதாசிவமும் எம்.எஸ்.ஸும் தங்கள் வாழ்க்கை மூலமாகவும், பணி மூலமாகவும் உணர்த்தினார்கள். கல்கி கிருஷ்ணமூர்த்தி தமது எழுத்து மூலமாக உணர்த்தினார். எழுத்து என்பது, இந்தப் பெரியவர்களைப் பொறுத்தவரையில், சமுதாய மேம்பாட்டுக்கான ஆயுதம்... எழுதுவது அவர்களது இறுதி நோக்கல்ல. சமுதாய மேம்பாடே இறுதி நோக்கு... நவீன சமுதாயத்தில் மீடியாவின் இறுதி நோக்கும் அவ்வாறே அமைய வேண்டும்."

வாணவராயரின் சொற்பொழிவு எத்தனை அற்புதமாக அமைந்தது என்பதற்கு, இறுதிவரை நிரம்பியிருந்த அரங்கமும், அவையோரின் தொடர்ந்த கைத்தட்டல்கள் மற்றும் சிரிப்பலைகளுமே சாட்சி.

தொகுப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**

"வெயில் காலம் வந்தாலே இலவச இணைப்பாக சருமப் பிரச்னைகளும் வந்து விடும். சுலபமாகக் கிடைக்கும் காய்கனிகளைக் கொண்டே உடலைக் குளிர்ச்சியாக்கி, அழகான சருமமும் பெறலாம்'' என்கிறார் சென்னை விருகம்பாக்கம், ஷில்பா பியூட்டி பார்லர் அண்ட் ஸ்லிம்மிங் சென்டரின் உரிமையாளர் லக்ஷ்மி ரவி.





கோடைக் காலத்தில் சன் ப்ரொடக்ஷன் ஃபேக்டர் 20 - 30 உள்ள ஸன் ஸ்கிரீன் லோஷனைப் பூசிக் கொள்ளாமல் வெளியே கிளம்பாதீர்கள். அப்படிப் பூசப்படும் லோஷனும் கூட அதிக பட்சம் மூன்று மணி நேரம் மட்டும் செயல்படும் என்பதால், மாலை வீட்டுக்கு வரும்போது சருமம் வதங்கியும், மங்கியும் இருக்கும். வீட்டுக்கு வந்ததும் அதைத் தேற்றுவதற்கான வழியைப் பாருங்கள்.

வெள்ளரிக்காய்ச் சாறு, புதினாச் சாறு இரண்டையும் குளிர்ந்த நீரில் கலந்து முகம் அலம்பிக் கொள்ளுங்கள். மிருதுவான டவலை உபயோகித்து, சருமத்தை ஒற்றி எடுத்து ஈரம் துடைக்க வேண்டுமே தவிர, அழுத்தித் துடைக்கக் கூடாது.

இரண்டு டேபிள் ஸ்பூன் தக்காளிச் சாற்றுடன் இரண்டு டேபிள் ஸ்பூன் மில்க் க்ரீம் கலந்து பத்து நிமிஷம் ஃப்ரிஜ்ஜில் வைத்து, முகத்தில் பூசிக் கொண்டு ஊறிய பிறகு முகம் அலம்பவும். 'ஜில்' என்று உணர்வீர்கள்.

இது தர்பூசணி ஸீஸன். பெரிய பழத்தை வாங்கி, சிறு துண்டங்களாக்கி மிக்ஸியிலிட்டுக் கூழாக்கவும். அதை ஃப்ரிஜ்ஜில் வைத்து குளிர வைக்கவும் இதனுடன் வெள்ளரி, தக்காளியையும் சேர்க்கலாம். தினமும் குளிப்பதற்கு முன்னால் இந்த விழுதை உடல் முழுவதும் பூசிக் குளித்தால், உடம்புக்குள் ஏ.ஸி வைத்தது போல இருக்கும். சருமமும் புதுப் பொலிவுடன் மிளிரும்...

பத்து கொத்து வேப்பிலையை உருவி, ஒரு லிட்டர் நீரில் போட்டு, நன்றாகக் கொதிக்க விடவும். வேப்பிலைச் சாறு இறங்கிய இந்த நீரை தினமும் குளிக்கும் நீரில் கலந்து பயன்படுத்தினால் சரும நோய்கள் அண்டாது. வேர்க்குரு, வேனல் கட்டி, சொரசொரப்பு, சரும எரிச்சல்களிலிருந்து விடுதலை கிடைக்கும்.

கண்களைச் சுற்றி கருமை அதிகமாவதும் கண்கள் களைத்துப் போய் எரிச்சல் எடுப்பதும், இந்தக் கோடைக்

# சூரியன்



காலத்தில்தான்! இதற்கு ஃப்ரிஜ்ஜில் வைத்த வெள்ளரிக் காய் வட்ட ஸ்லைஸ் கள் மிகவும் உதவும். ஆனால் வெள்ளரித் துண்டங்களை, கண்கள் மீது வைத்துக் கொண்டு ரிலாக்ஸ்டாக படுத்து ஓய்வெடுக்க பலரால் முடியாது. அதனால் ஒரு வெள்ளரிக்காயைத் துருவி மிக்ஸி யிலிட்டு சாறாக்கிக் கொள்ளவும். அத னுடன் சமமான அளவில் புதினாச் சாறு கலந்து, சின்ன பாட்டிலில் அடைத்து ஃப்ரிஜ்ஜில் வைத்து விடவும். இந்த வெள்ளரிச் சாற்றின் சில துளிகளை பஞ்சில் ஒற்றி எடுத்து, கண்களைச் சுற்றிலும் இமைகளின் மீதும் தடவி வரவும். சாறு காய்ந்ததும் மீண்டும் தடவிக் கொள்ளலாம். இதை வீட்டு வேலைகள் செய்யும் போதே தொடர்ந்து செய்யலாம். வெள்ளரி ஸ்லைஸை விட, சாறு விரைவாகச் செயல்பட்டு, நல்ல பலன் தரும்.

வெள்ளரி, புதினாச் சாறு ஒரு வாரத்துக்குக் கெடாமல் இருக் கும் என்பதால், ஒரே சமயத்தில் தயாரித்து ஃப்ரிஜ்ஜில் வைத்துக் கொள்ளலாம்.

சிறிது எலுமிச்சைச் சாற்றுடன், கொஞ்சம் பால், மஞ்சள் தூள், வெள்ளரிக்கூழ் சேர்த்து கலந்து இரு வேளையும் பூசி வந்தால், களைத்தும், கறுத்தும் போன சருமம் தகதக என்ற அழகு பெறும். சூரியக்கதிர்களால் பாதிக் கப்பட்ட சருமத்தின் கறுமை நீங்கி, புதிய வனப்பு கிடைக்கும்.

பெரும்பாலும் கோடைக் காலங்களில் தலையில் வியர்வையும் எண்ணெ யும் சேர்வதால் பிசுபிசுப்பு அதிகமிருக் கும். இதற்கு தினசரி தேய்க்கும் எண்ணெயுடன் ஒரு ஸ்பூன் எலுமிச்சை சாறு கலந்து தேய்த்து, மயிர்க்கால்களில் படும்படி, நன்றாக மசாஜ் செய்து, குளித்து விட்டாலே, தலைமுடியின் பிசுபிசுப்புத் தன்மை நீங்கி, இயற்கையான பொலிவு கிடைக்கும்.

வெயில் காலத்தில் தலையில் வியர்வை அதிகம் ஊறுவதால் அரிப்பும் எரிச்சலும் அதிகமிருக்கும். பேன், ஈறு தொல்லையும் ஆரம்பமாகி விடும். இதற்கு அருமையான ஹெர்பல் பேக் இருக்கிறது. வேப்பம் பொடி, துளசிப் பொடி, செம்பருத்தித் தூள், நெல்லித்தூள், வெந்தயத்தூள் போன்ற பொடிகளை தயிரில் கலக்கவும். பிறகு தலையில் 'பேக்' போல போட்டு, அரை மணி நேரம் ஊறியதும் குளிக்க, பட்டு போல தலைமுடி பளபளக்



கும். கண்களில் வெப்பம் பறந்து மறை வதை நீங்களே உணர முடியும்.

ஒரு சிலருக்கு தலைமுடி வறண்டு களையின்றி காணப்படும். இவர்கள் ஒரு முட்டையின் மஞ்சள் கருவை மட்டும் நுரைக்க அடித்து, தலையில் பூசிக் குளிக்க... கூந்தல் மினு மினுப்பான எழிலுடன் மிளிரும்.

**- டாலி**

படம்: **ஸ்ரீஹரி**

# உஷார்!

# ஜே.கே!

**எழுத்தாளர் ஜெயகாந்தனுக்கு 2002ம் ஆண்டுக்கான ஞான பீட விருது வழங்கப்பட்டுள்ளது. "தமிழ் இலக்கியத்துக்கு மட்டுமின்றி, இந்திய இலக்கிய உலகுக்கு அவரது பங்களிப்பு மேன்மை சேர்த்திருக்கிறது" என்று தேர்வுக் குழுவினர் பாராட்டியுள்ளனர். ஜே.கே. பற்றி அவரை நெருக்கமாக அறிந்தவர்கள் பேசுகிறார்கள்.**

"ஜெயகாந்தன், உண்மையை விரும்புகிற மனிதர். பொய் பேசுவது அவருக்குப் பிடிக்காது. பாராட்டுகளாலும், புகழுரைகளாலும் அவரை சந்தோஷப்படுத்திவிட முடியாது. ஒரு நாள் அவருடன் நானும், தேவபாரதி என்பவரும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது ரேடியோவில், ஜெயகாந்தனுக்கு சாகித்திய அகாடமி விருது அளிக்கப் பட்டிருப்பதாக செய்தி சொன்னார்கள். ஜெயகாந்தன், அதை யாரோ ஒரு மூன்றாவது நபர் சம்பந்தப்பட்ட தகவல் போலக் கேட்டுக் கொண்டு, எங்களுடன் பேச்சைத் தொடர்ந்தார்" என்கிறார் மூத்த பதிப்பாளரான 'கலைஞன்' மாசிலாமணி.



ஆழ்வார்ப்பேட்டையில், மௌபரிஸ்ரோட்டில் ஜெயகாந்தனின் 'மடம்', இலக்கிய வட்டாரத்தில் வெகு பிரபலம். ஆனால் ஜெயகாந்தன் அந்த இடத்தை 'சபை' என்றே குறிப்பிடுவார். ஜெயகாந்தனின் நண்பர் அங்கே சினிமாக் கம்பெனி நடத்தி வந்தார். அவர் புறப்பட்டபோது, ஜெயகாந்தன் அந்த இடத்தைப் பெற்றுக் கொண்டார். மாலை நாலு மணி அளவில் தினமும் அவர் அங்கே வந்து விடுவார். அவரது அபிமானிகளும் அங்கே வந்து விடுவார்கள். வானத்தின் கீழ் உள்ள அனைத்து விஷயங்களும் அங்கே பேசப்படும். "தமது நெருங்கிய நண்பர்களை, சஹ்ருதயர்கள்" என்றுதான் ஜே.கே. குறிப்பிடுவார்" என்கிறார் அறுபதுகளிலிருந்து ஜெயகாந்தனை நன்கறிந்த கே.எஸ்.சுப்ரமணியன். ஆசிய வளர்ச்சி வங்கியில் உயர் பொறுப்பில் இருந்தவரான இவர், ஜே.கேவின் எழுத்துக்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.

"வாழ்க்கை என்பது திறந்த புத்தகமாக இருக்க வேண்டும். சுய விமர்சனம் என்பது எல்லோருக்கும் அவசியம். அவர் தமது கோபதாபங்கள், வருத்தங்கள், அசட்டுத்தனங்களைக்கூட இயல்பாக வெளிப்படுத்துவார். வாழ்க்கையில் நம்பிக்கை வைக்க வேண்டும். நம்மைவிட நம் குழந்தைகள் புத்திசாலிகள்; படிப்பாளிகள். அவர்களுக்கு உள்ள வாய்ப்புகள் ஏராளம். வளர்ச்சி இருக்கிறபோது, பிரச்னைகள் இருக்கவே செய்யும். பிரச்னைகளைக் கண்டு பயப்படக்கூடாது" என்று அவர் சொல்லுவார் என்கிறார் சுப்ரமணியம்.

"ஒரு முறை ஜெயகாந்தன் கொல்கத்தாவுக்குச் சென்றிருந்தார். அவர் நாத்திகராக தம்மை அறிவித்திருந்த காலகட்டம் அது. ஆசாரமான குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரது வீட்டுக்கு அவரை அழைத்திருந்தார்கள். அந்த வீட்டின் முதிய பெண்மணி ஜெயகாந்தனின் தீவிர

வாசகி. ஜெயகாந்தனைப் பார்த்ததும், உள்ளம் பூரித்து, நேரே பூஜை அறைக்குப் போய், பத்தாண்டுக் காலமாய் புனிதமாய் பாதுகாத்து வைத்திருந்த கங்கை நீரை எடுத்து வந்து, சிறிது எடுத்து ஜெயகாந்தனிடம் கொடுத்தார்.



ஜெயகாந்தனுக்கு, 'இது வெறும் ஆக்ஸிஜனும், ஹைட்ரஜனும் சேர்ந்த ரசாயனப் பொருள் தானே! இதிலே புனிதம் எங்கே வந்தது?' என்ற கேள்வி மனத்தில் எழுந்தது. ஆனால் மறுகணமே, 'அந்த அம்மையாருக்கு கங்கை நீர் மீது நம்பிக்கை இருக்கிறது. அதை மதித்து நடக்க வேண்டாமோ?' என்ற கேள்வியும் எழுந்தது. அவர் கொடுத்த கங்கை நீரை வாங்கி அருந்தினார். இந்தச் சம்பவத்தை எழுதும் போது ஜே.கே. "இப்போதெல்லாம் எல்லா நீருமே எனக்கு கங்கை நீராகவே தெரிகின்றன" என்று குறிப்பிடுகிறார்.

சுப்ரமணியம் நினைவு கூர்ந்த சில சுவையான சம்பவங்கள்:

ஜெயகாந்தனின் கே.கே.நகர் வீட்டில் தென்னை மரங்கள் உண்டு. ஒரு நாள் இரவு, ஒருவன், தென்னை மரமேறி தேங்காய்களைத் திருடிச் செல்ல வந்தான். சத்தம் கேட்டு, கண்விழித்துவிட்ட ஜே.கே. வெளியில் வந்து "அப்பா, தேங்காய் பறிக்க பல நாட்களாக ஆள் தேடிக் கொண்டிருந்தேன். நல்ல காலம் நீ வந்தாய்! எல்லா தேங்காய்களையும் பறித்துப் போடு! உனக்கு வேண்டியதை எடுத்துக் கொண்டு, மீதியை எனக்குக் கொடுத்துவிட்டுப்போ" என்று சொன்னார். தேங்காய் பறித்துப் போட்டு விட்டு, திருடவந்தவனிடம் இப்படியும் ஒருவர் நடந்து கொள்ளுவாரா என ஆச்சரியப்பட்டு "எனக்கு ஒரு தேங்காய் கூட வேண்டாம்!" என்று போனான் வந்த மனிதன்.

ஜெயகாந்தனிடம் ஒரு பழைய ஹெரால்டு கார் உண்டு. அதை எடுத்துக் கொண்டு, இயற்கையை ரசித்தபடி அவ்வப்போது கிளம்பி விடுவார். வழியில் ஏரி, குளம் கண்டால், சந்தோஷமாய்க் குளித்து விட்டு, பயணத்தைத் தொடருவார். அப்படி ஒரு தடவை புறப்பட்ட போது, அவருக்கு ரொம்ப தாகம். அந்த வழியே போன இளம் பெண்ணிடம் கேட்டபோது "கம்பங்கூழ் இருக்கு" என்று சொல்லிக் கொடுத்தாள். அதைக் குடித்து விட்டு, பாக்கெட்டிலிருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டிய போது, "வயித்துக்குக் கஞ்சி கொடுத்துட்டு, காசு வாங்கற ஜாதி இல்லீங்க நாங்க" என்றாள் அந்தப் பெண் பட்டென்று. இதைப் பற்றியும் நெகிழ்ச்சியுடன் ஜே.கே. எழுதியிருக்கிறார்.

தொகுப்பு : **எஸ்.சந்திரமௌலி**

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

மௌத்கல்ய மஹரிஷி சொல்கிறார்... 'எது தபஸ்?' என்று கேட்டால், வேதோச்சாரணம்தான் தபஸ். நல்ல முறையிலே வேதத்தை உச்சரிக்கக்கூடியவர்கள் இருக்கிறார்களே, அவர்கள் சொல்கிறபோது, அதைக் கேட்பவர்களுக்குச் சகலவிதமான ச்ரேயஸும் ஏற்படுகிறது. வேத . .தை நல்லமுறையிலே எடுத்துச் சொல்லவில்லையானால், சொல்கிறவர்களுக்கும் கெடுதல்; கேட்கிறவர்களுக்கும் கெடுதல் ஏற்படுகிறது.

ஸ்வரத்திலே பேதம் வந்துவிட்டாலும், நிறுத்த வேண்டிய இடத்தில் நிறுத்தாமல் திடீரென்று பாதியிலே கொண்டு போய் நிறுத்தி, மூச்சை விட்டுவிட்டாலும், அது சொல்லப்பட்டதாக ஆகாது. பொய்யான வார்த்தை சொன்னதாக ஆகும். கெடுதல் ஏற்படும்.

அந்த மாதிரி ஏற்பட்டிருக்கிறதா என்று கேட்டால், பூர்வ காலத்தில் அப்படியெல்லாம் ஏற்பட்டிருக்கிறது.

ஆகவே, வேதோச்சாரணத்தில் உச்சரிப்பு, ஸ்வர ஸ்தானம் நல்லமுறையிலே இருக்க வேண்டும். தேவதைகளெல்லாம் ஸ்வரத்துக்குக் கட்டுப்பட்டவர்கள் ஆனதனாலே, அப்படிப்பட்டவர்கள், அந்த ஸ்வரத்துக்குரிய சப்தஸ்தானத்தால் ஆராதிக்கப்படுவர். தீர்க ஸ்வரிதத்தோடு சொல்ல வேண்டியதை, தீர்க ஸ்வரிதத்தோடு சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லவில்லையென்றால், தேவதைகள் ஒதுங்கிப் போய்விடுவார்கள்.

ஆகவே உச்சாரணம் நல்ல முறையிலே இருக்க வேண்டும். அப்படி உச்சாரணம் நல்ல முறையிலே இருக்க வேண்டுமானால், சரீரத்தில் இருக்கிற வாயுக்களெல்லாம் நல்ல



# குறையொன்றுமில்லை

முறையிலே வேலை செய்ய வேண்டும். அந்த வாயுக்களை நல்ல முறையிலே வேலை செய்ய வைக்கக் கூடியவன் பரமாத்மா.

'வாய்க்ரியாதிகரணம்' என்று ப்ரும்ம சூத்திரத்திலேயே வாயுகரணத்துக்கு அதிபதியாய் இருக்கக் கூடியவன் பரமாத்மா, அக்னிக்கு அந்தர்யாமியாக இருந்து நம்மை வழி நடத்தக்கூடியவன் பரமாத்மா... என்றெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு ஆசார்யர்கள் அழகாக வியாக்யானம் பண்ணிக் காட்டியிருக்கிறார்கள். ப்ரும்ம சூத்திர பாஷ்யத்தில் இதைப் பார்க்கலாம்: இந்த வாயு சலனத்துக்கே காரணமாக இருக்கக் கூடியவன்; ஆகாசம், லோமாகாசம், புடாகாசம், ஜடாகாசம், பரமவியோமம்... அனைத்துக்கும் அதிபதி அவனே.

'கீழ்வானம் வெள்ளென்று எருமை
சிறுவீடு மேய்வான் பறந்தன காண்'

என்று ஆண்டாள் பாடினாள். கீழ் வானம் என்றால், உடனே நமக்கு மேல் வானம் என்று ஒன்று இருப்பது தோன்ற வேண்டுமல்லவா?

கீழ்பாக்கம் என்று ஓர் ஊர் இருக்கிறது என்றால், மேல்பாக்கம் என்பதாகவும் ஒன்று இருக்க வேண்டுமல்லவா!

'ஆகவே கீழ்வானம் வெளுத்தது' என்றால், நாம் இருக்கிற இடத்திலிருந்து பார்க்கிற வானம். மேல் வானம் என்பது தகராகாசம்.

'தகரவித்யா' என்று ப்ரும்ம வித்யையிலே, அங்கே - வைகுண்டத்திலே இருக்கிற பகவானை நாம் இங்கேயிருந்தபடியே உபாஸனை பண்ணுகிறோம். இப்படி உபாஸிப்பதுதான் தகர வித்யா என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு உபாஸிப்பவர்களுக்கு எம் பெருமான் பலனைக் கொடுக்கிறான்.

ஆக, அந்த தகராசமாகவும், நாம் பார்க்கிற இந்த ஆகாசமாகவும் பகவானே இருக்கிறான். அக்னியாகவும் இருக்கிறான்; தீர்த்த ரூபியாகவும் அவனே விளங்குகிறான்.

எல்லா தீர்த்தங்களையும் பரிசுத்தமாக்குகிறான் அவன். அந்த புண்டரீகாக்ஷனை மனத்தில் நினைத்து, அவன் திருநாமத்தைச் சொல்லி, தீர்த்தத்தை அபிவந்தித்துப் புரோக்ஷணம் பண்ணினால், தீர்த்தத்துக்கே சுத்தி ஏற்படுகிறது. தீர்த்தத்துக்கே சுத்தி உண்டு பண்ணக் கூடியவனாக பரமாத்மா விளங்குகிறான்.

ஜலத்திலேயே படுத்துக் கொண்டிருக்கிறான் பரமாத்மா. அதனால்தான் அவனுக்கு நாராயணன் என்று பெயர். நாரங்



21

கள் என்றால் தீர்த்தம். ஜலத்திலே எவனுக்குப் படுக்கையோ, அவனுக்குத்தான் நாராயணன் என்று பெயர். அதனால்தான் பெரியோர்கள் சிலேடையாக ஒரு விஷயத்தைச் சொன்னார்கள். பூர்வ காலத்தில் பழையது சாப்பிடுவது வழக்கம். முதல் நாள் சாதம் மீந்துபோனால், அதை எடுத்து தீர்த்தத்திலே சேர்த்து வைப்பார்கள். ராத்திரி மொத்தம் அது தீர்த்தத்திலேயே இருக்கும். மறுநாள் அதை எடுத்துப் பிழிந்து, அதிலே மோர் குத்தி, விசேஷமாக கிச்சிலிக்காய் ஊறுகாயை - நார்த்தங்காய் ஊறுகாயைப் போட்டுக் கொடுப்பார்கள்.

அந்த தீர்த்தம் இருக்கிறது பாருங்கள். அன்ன ரஸத்தோடு இருக்கிற அந்த ஜலம், அதைப் பருகினால், பிராத : கால வெயிலில் ஏற்படக்கூடிய தாகத்தைத் தடுக்கக் கூடிய சக்தி அதற்கு இருக்கிறது. அதனால், விவசாயிகளெல்லாம் வயலில் வேலை செய்கிறபோது, அந்த தீர்த்தத்தைப் பருகுவது வழக்கம். அந்தப் பழையதும் பகவானும் ஒன்று என்றார் ஒருத்தர்.

ஏனென்றால், 'பழையது' என்று அதற்குப் பெயர்; இவனும் புராண புருஷன்!

அதுவும் ஜலத்திலே படுத்துக் கொண்டிருக்கிறது; இவனும் ஜலத்திலே படுத்துக் கொண்டிருக்கிறான்.

பழையதை எல்லோரும் சாப்பிடுவார்களா? அதனுடைய பெருமையை அறிந்தவர்கள் மட்டும்தானே சாப்பிடுவார்கள்...! அந்த மாதிரி பெருமையை உணராதவர்கள் போய்விடுவார்கள். பகவானை அனுபவிப்பதும், அவன் பெருமையை உணர்ந்தவர்களால்தான் முடியும்.

பழையதை ராத்திரியில் வைத்துக் கொண்டு சாப்பிடக்கூடாது. பிராத : காலத்தில் தான் சாப்பிடவேண்டும். அந்த மாதிரி, நாராயணனை 'பிராத: நமாமி' என்று பிராத : காலத்தில் தியானம் பண்ண வேண்டும் - இப்படி வேடிக்கையாக, சிலேடையாகச் சொல்லியிருக்கிறது.

ஆகவே, தீர்த்தத்தில் படுத்துக் கொண்டிருப்பவன்தான் நாராயணன். ஏன் தீர்த்தத்திலே படுத்துக் கொண்டிருக்கிறான்...?

வேதம் சொல்கிறபோது என்ன சொல்கிறது என்றால், முதன் முதலில் சிருஷ்டியிலே எது உண்டாயிற்று என்றால், ஜலம்தான் உண்டாயிற்று என்கிறது.

சிருஷ்டி கிரமத்திலே பார்க்கிறபோது, இப்போது நாம் எந்த சிருஷ்டியிலே இருக்கிறோம் என்று கேட்டால், ஜல சிருஷ்டியிலே இருக்கிறோம்.

முக்கால் பங்கு ஜலத்தினால் சூழப்பட்டு, மீதி கால் பங்கு பூமி பாகத்தினால் இருப்பதனாலே, அந்த ஜலமயமான சிருஷ்டியிலே, பஞ்சகரண ஸ்ருஷ்டி என்று பெயர் அதற்கு - அந்த பஞ்சகரண சிருஷ்டியிலே கால் பங்கு, அரைக்கால் பங்காக, அரைக்கால் பங்காக பகவான் மெள்ள சேர்க்கிறான். மீதி பூதங்களையெல்லாம், இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்க்கிறபோது, அந்த சிருஷ்டி, இப்போது நாம் பார்க்கிறோமே, அந்த மாதிரி அமைகிறது. ஜலம் அதிகமாய் இருக்கிறது. அதனால் தான் வேதம், இந்த யுகத்துக்கு ஏற்ப, 'ஜலம் முதலில் உண்டாயிற்று' என்கிறது.

'அந்த ஜலத்திலிருந்து எல்லாம் வரிசையாக வந்தன. அதிலே அழகான ஒரு தாமரை தோன்றிற்று. அதிலிருந்து அந்த பகவானுடைய நாபிக் கமலம் விசேஷமாகத் தோன்றிற்று. அதிலிருந்தே பகவான் தோன்றினான்...' என்றெல்லாம் சிருஷ்டியை விவரிக்கிறது வேதம்.






இதையே விஞ்ஞானி டார்வினின் தியரி என்று இப்போது எல்லோரும் படிக்கிறார்கள்.

'தீர்த்தம்தான் முதலில் உண்டாயிற்று' என்று அந்த விஞ்ஞானியும் எடுத்துச் சொல்கிறார். அதற்குப் பிறகு ஒரு 'செல்' பிராணி; இரண்டு செல் பிராணி, அமீபா என்றெல்லாம் தோன்றிற்று என்கிறது விஞ்ஞானம்.

வேதத்தில் அது சொல்லப்படவில்லை. வேதத்தில் சொல்லப்படாததை விஞ்ஞானி வேறு விதமாக விவரிக்கிறான். ஆனால், முதலில் தீர்த்தம் உண்டாயிற்று என்பதற்கு மூலம், வேதம்தான் என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

முதலில் உண்டாயிற்று தீர்த்தம். அந்த தீர்த்தத்திலே அவன் படுத்துக் கொண்டிருக்கிறான். அதனால் முழு பீஜம் அவன்; எல்லாவற்றுக்கும் மூல காரணம் ஆனவன் என்பதைக் காட்டுவதற்காக.

இப்படி பஞ்ச பூதங்களாகவும், பஞ்ச பூதங்களின் வேறுபட்ட தன்மையாகவும், வேறுபட்ட தன்மையுடைய அவை எல்லாமாகவும், எல்லாவற்றினுள்ளும் அவனே இருக்கிறான். அதை 'மாயா, வாமனனே, மதுசூதா நீ அருள்வாய்' என்கிறார் நம்மாழ்வார்.

"நீதான் சொல்ல வேண்டும். எனக்குப் புரியவே இல்லை இந்த விஷயம்! உன் மாய சேஷ்டிதங்கள் எனக்குத் தெரியவில்லையே; நீயே கூறி அருள்வாய்" என்கிறார்.

ஆழ்வார் சொல்வதற்கு மூல காரணம் எது என்றால், 'பூத க்ருத் பூத ப்ருத் பாவ: பூதாத்மா பூத பாவன:' என்று சஹஸ்ர நாமத்தில் வரக்கூடிய இந்தத் திருநாமங்கள்தான்.

பூதத்தை உண்டு பண்ணினான். அதற்கு முன்பும் அவனே இருந்தான். அதற்குப் பின்பும் இருக்கிறான். 'பூத ப்ருத்' - எல்லாவற்றையும் தாங்குகிறான். எப்படித் தாங்குகிறான்...? சங்கல்ப மாத்திரத்தினால் தாங்குகிறான்.

ஒருத்தர் பெரிய மூட்டையைத் தலையிலே தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறார். அதை எப்போது கீழே இறக்கி வைப்போம் என்று இருக்கும் அவருக்கு. அப்படித்தான் பகவான் தாங்குகிறானா, என்றால், இல்லை! அதது அப்படியிருக்க வேண்டும் என்று அவன் எண்ணினால், அப்படியே இருக்கின்றன. அவனுடைய இச்சை அது.

அந்த மாதிரி, பகவான் அவையவைகளுள் உள்ளே புகுந்து தாங்குகிறான் என்றால், சங்கல்ப மாத்திரத்திலே ஆதார பூதனாக இருந்து தாங்குகிறான்.

அவன் அவ்வாறு தாங்குகிறான் என்பதை பிரளய பயோதியிலே முதன் முதலாகப் பார்த்தார், மார்க்கண்டேய மஹரிஷி. தோத்திரம் பண்ணுகிறார் அவர். எத்தனையோ கல்ப காலம் வாழ்ந்தவர் மார்க்கண்டேய மஹரிஷி. அப்படிப்பட்டவர், பிரளய காலத்திலே, அந்த ஆலம் இளம் தளிரிலே, பகவான் சயனித்துக் கொண்டிருக்கிற அழகைப் பார்த்து, 'சர்வத்தையும் தாங்கக் கூடியவன் இவன்தான்' என்று உணர்ந்து துதிக்கிறார்.

'மாலே மணி வண்ணா' என்று ஆரம்பித்து ஆண்டாள் கேட்கிறாள்.. கோல விளக்கு, கொடி, விதானம்... எல்லாம் கேட்கிறாள்...!

'ஆலின் இலையாய் அருளேலோர் எம்பாவாய்' என்கிறாள்.

ஏகமாக ஒரு பட்டியல் கொடுத்து, இது மொத்தத்தையும் நீ கொடுக்க வேண்டும் என்று கேட்டால், "இதெல்லாம் என்னால் கொடுக்க முடியுமா என்ன?" என்று பகவான் கேட்கிறானாம்!

அதற்கு ஆண்டாள் சொல்கிறாள்...

(வளரும்)

# இளமை கல்கி





# மின்சாரக் குரல்!

"உன் காதல் மொத்தத்தையும்
எனக்குக் கொடுத்திடு...
இப்பொழுதே கொடுத்திடு..."

– என்று காதல் ஒளிரும் வரிகளை இவர் பாடும்போது, நம் காதுகள் கைதாகி விடுகின்றன - இவரது மின்சாரக் குரலுக்கு!

நோரா ஜோன்ஸ் - பண்டிட் ரவி சங்கரின் மகள் - இருபத்தைந்து வயதில் எட்டு கிராமி அவார்டுகள் - அதுவும் இரண்டே இசை ஆல்பங்களில்!

'கம் அவே வித் மீ', 'ஃபீல்ஸ் லைக் ஹோம்' என்ற இரு ஆல்பங்களுமே விற்பனையில் சாதனை படைத்தவை. (மூன்று வருடங்களுக்குள் 37 மில்லியன்)

ஜாஸ், ப்ளூஸ், ஃபோக், பாப் என எல்லாம் இவருக்கு வசமாகிறது. ரசிகர்களை வசியப் படுத்துகிறது. தற்போது ஆசிய நாடுகளான பாங்காக், சைனா, கொரியா, தாய்வான் மற்றும் ஆஸ்திரேலியா என டூர் அடித்துக் கொண்டிருக்கிறார்.

மேடையில் பியானோவின் கறுப்பு - வெள்ளை கட்டைகளில் இவரது விரல்கள் வண்ண மயமாக நடனமாடும்போது கூட்டம் தன்னை மறந்து 'சாமி' ஆடுகிறது.

"ரசிகர்களின் ஆதரவு அபாரம். ஆனா மேடையில் கொசுக் கடிதான் ஜாஸ்தி!" என்றார் பாங்காக் நிகழ்ச்சியை முடித்து விட்டு!

பாடல்களுக்கிடையில் 'ஐ லவ் யூ!' ரசிகர்களிடமிருந்து ஒலித்துக் கொண்டே இருக்கிறது. அவர்களைப் பார்த்து கையசைத்து, "ஐ லவ் யூ டூ!" என சொல்லிவிட்டு, நோரா காதலுடன் தொடர்கிறார் தன் வரிகளை...

"ஓர் அழகான நட்பு
முடியப் போகிறது...
உன் கண்கள் அதைச்
சொல்கிறது!
ஓர் அழகான நட்பு முடியப்
போகிறது...
அது காதலாய்த் தொடங்கப்
போகிறது!"

- முகில்







# புதிய தலைமுறை

**F1** பார்முலா ரேஸ் கூட தமிழனுக்கு சாத்தியமாகிவிட்டது. ஆனால் இந்த பாப் ஆல்பம்தான் சிறு முன்னேற்றமும் அடைய வில்லை. ஆனால் எஸ்.எஸ்.மியூசிக் சேனலின் 'இசை' ஆல்பம் புத்துயிர் அளிப்பதாகத் தெரிகிறது. அனைத்தா, அர்ஜுன், ஸ்வேதா, பார்கவி, பென்னி என ஐவரின் இன்னிசை ஆல்பத்தை, ஏ.ஆர்.ரஹ்மான் வெளியிட 'மலரே' பாடலைக் கேட்ட அனைவருமே உணர்ந்த விஷயம் - இசையுலகில் புதுத் தலைமுறை பிறந்துவிட்டது!

- ச.ந., படங்கள் : பப்பி

# இளமை கல்கி

# கொடுத்து வைத்த ஆதாம்!

நம்முடைய சிட்டி லைஃப் சுத்த வேஸ்ட். பிறந்தால் மத்தியப் பிரதேசத்தில் ஓர் ஆதிவாசியாகப் பிறக்க வேண்டும். கிரிட்டிங் கார்ட், சிம் கார்ட், விசிட்டிங் கார்ட், பால் கார்ட் எல்லாம் தான் நம்மிடம் இருக்கின்றன. ஆனால் என்ன பிரயோஜனம்? தைரியமாக ஒரு பெண்ணிடம் சென்று 'ஐ லவ் யூ' என்று அவள் முகத்தைப் பார்த்து சொல்ல முடிகிறதா? மொத்தம் மூணே மூணு குட்டி வார்த்தைகள் தான். ஆனாலும் சொல்ல முடியவில்லை. யோசித்து யோசித்து, மண்டை காய்ந்து டிங்கு ஃபீவர் வராததுதான் மிச்சம்.

இதே ஆதிவாசியாக இருந்தால் இந்தப் பிரச்னையே கிடையாது. "மம்மி, மம்மி நான் ஒரு பொண்ணை இன்னிக்கு மார்க்கெட்ல பார்த்தேன். ஷி ஈஸ் ப்யூட்டிபுல். நாளையிலேர்ந்து நான் அவளை லவ் பண்ணப் போறேன்" என்று ஒரு ஆதாம் தைரியமாகப் போய் தன் அம்மாவிடமே சொல்லலாமாம். அவன் அம்மாவும் அரச இலையில் கட்டம் போட்ட ஸ்வெட்டரைப் பின்னிக் கொண்டே "அப்படியா ராஜா, யார் அந்தப் பொண்ணு, அவ அட்ரஸ் என்ன, எந்தத் தெரு, எந்த வீடு?" என்று கவனமாகக் கேட்டு வாங்கிக் கொள்வாராம்.

அடுத்த ஸ்டெப் என்ன தெரியுமா? ஆதாமின் மம்மியும் டாடியும் நேராக ஏவாள் வீட்டுக்குச் சென்று, தன் மகன் சார்பில் ப்ரொபோஸ் செய்வார்களாம். ஏவாள் ஃபேமிலிக்கும் ஓகே எனும் பட்சத்தில்... வேறென்ன, டும் டும் டும் தான்.



ஒரு வேளை ஆதாம் தானாகவே தன் ஏவாளிடம் ப்ரொபோஸ் செய்ய வேண்டும் என்றால், அதற்கும் அலட்டிக் கொள்ள வேண்டாம். நேராக அவளிடம் சென்று "இந்தா ஒரு சின்ன கிப்ட்" என்று சொல்லி சின்னதாக வெட்கப்பட்டுக் கொண்டே ஒரு சீப்பைக் கொடுத்தால் போதும். ஏவாள் உடனே கால் விரல்களால் கோலம் போட ஆரம்பித்து விடுவாளாம்.

சீப்புக்கு அப்படியொரு மகிமை. ஹூம்... நாமும் தான் சீப்பு வைத்திருக்கிறோம். என்ன பிரயோஜனம்?

- மருதன்

# விரும்புகிறேன்!

ஒரு காலத்தில் சிறுகதையின் சிகரமாகக் காட்சியளித்த கல்கி, நாளடைவில் அரசியல், சமூகம், விளையாட்டு, சினிமா, மருத்துவம் என பல துறைகள் தொடர்பான செய்திகளையும் பல்வேறு கோணங்களில் தந்து, காலத்திற்கேற்றாற் போல் புதுச்சட்டையை அணிந்து கொண்டது வரவேற்கத்தக்கது.

சினிமா நடிகைகளைப் பற்றி கிசுகிசுவாகவும், அவதூறாகவும் எழுதுகிற பத்திரிகை உலகத்தில், கல்கி சினிமா செய்திகளையும் கண்ணியத்துடன் எழுதுவதால் கல்கியை நான் 'விரும்புகிறேன்'.

- சிநேகா




படம்: ஸ்ரீஹரி


வாத்தியங்களே
வைத்தியம் செய்யும்
தம்புரா, ஏகதந்தம், ஜாயிண்ட் வீணை, லைன் கார்விங்
மற்றும் எம்பாஸ்டு வீணை, மிருதங்கம், தபலா, வயலின்
பாங்கோஸ், புல்லாங்குழல், ஆர்மோனியம் உடுக்கை,
சுருதிபெட்டி (Manual), சுருதி பெட்டி(Electronic), தம்புரா,
Electronic Keyboard, சலங்கை, ஜால்ரா மற்றும் எல்லாவிதமான
வாத்யகருவிகளும் கிடைக்கும்.
• மிகச் சிறந்த இசைக்கருவிகள் • உன்னதமான சேவை
ROWSONS MARKETING PRIVATE LTD.
"CHARUKESI"
"சாருகேசி"
11/7, Perumal Nagar Main Road, Nanganallur, Chennai - 600 091.
Phone : (Off) 55853201 (Res) 22311405
Mobile : 94440 19770




45, என்.எஸ்.பி. ரோடு, திருச்சி – 2. போன் : 2702077
தன்பில்டிங், 827, அண்ணாசாலை, சென்னை – 2. போன் 28521177